بسم الله الرحمن الرحيم

# அன்றாடம் கடைப்பிடிக்க 1000 ஸுன்னத்துகள்

அஷ்ஷைக் காலித் அல்ஹுஸைனான்

தமிழில்

**முஃப்தி அ. உமர் ஷரீஃப் காஸிமி**



# பொருளடக்கம்

# பதிப்புரை

அல்லாஹ்விற்கே எல்லாப்புகழும்! முஹம்மது ﷺ அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் நல்லோர் அனைவர் மீதும் ஸலவாத்தும் ஸலாமும் உண்டாகட்டும்.

அல்லாஹ்வின் அருளால் பல நல்ல நூல்களை தமிழாக்கம் செய்து வெளியிட்டு வரும் தாருல் ஹுதா தனது 23வது நூலாக இந்த நூலை வெளியிடுகிறது. அல்ஹம்துலில்லாஹ்.

நபி ﷺ அவர்களின் வாழ்க்கையை நாம் முழுமையாக பின்பற்றுவது கொண்டே அல்லாஹ்வின் அன்பையும் மன்னிப்பையும் அடைய முடியும். அதற்கு இந்த நூல் இன்ஷா அல்லாஹ் மிக்க பயனுள்ளளதாக இருக்கும்.

இந்நூல் வெளிவர உதவி செய்த எல்லா இஸ்லாமிய சகோதர சகோதரிகளுக்கும் அல்லாஹ் நல்லருள் புரிவானாக!

இந்த நூலில் பிழைகள் ஏதும் இருப்பின் தயவு கூர்ந்து சிரமம் பாராமல் வாசக நண்பர்கள் எங்களுக்கு தெரியப்படுத்தவும். அடுத்த பதிப்பில் திருத்தி வெளியிடுவதற்கு அது எங்களுக்கு மிக உதவியாக இருக்கும். அல்லாஹ் உங்களுக்கு நற்கூலி வழங்குவானாக!

முஃப்தி அ. உமர் ஷரீஃப் காஸிமி

(அல்குர்ஆன் மற்றும் நபிமொழிப் பணியாளன்)

தாருல் ஹுதா, சென்னை - 1.

# தாருல் ஹுதா
# ஓர் அறிமுகம்

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது ﷺ அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்!

இஸ்லாமியச் சகோதர சகோதரிகளே!

அஸ்ஸலாமு அலைக்கும்
வரஹ்மத்துல்லாஹி வபரகாத்துஹு

தாருல் ஹுதாவை அறிமுகம் செய்வதன் வாயிலாக உங்களைச் சந்திப்பதில் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம். இதில் தாருல் ஹுதாவின் நோக்கத்தையும் அதன் பணிகளையும் விவரிப்பதுடன் அதன் இன்றைய தேவையையும் தங்கள் முன் வைக்கிறோம்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்:

நம்பிக்கை கொண்ட ஆண்களும், நம்பிக்கை கொண்ட பெண்களும் (தங்களுக்குள்) ஒருவருக்கொருவர் உற்ற துணைவர்களாவர். அவர்கள், (ஒருவர் மற்றவரை) நன்மை செய்யும்படித் தூண்டியும், பாவம் செய்யாது தடுத்தும், தொழுகையைக் கடைப்பிடித்து, ஸகாத்து கொடுத்தும் வருவார்கள். அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடப்பார்கள். இத்தகையவர்களுக்கு அதிசீக்கிரத்தில் அல்லாஹ் அருள் புரிவான். நிச்சயமாக, அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்."

(அத்தவ்பா 9:71)

(நம்பிக்கையாளர்களே!) உங்களில் ஒரு கூட்டத்தார் (மனிதர்களை) சிறந்ததின் பக்கம் அழைத்து நன்மையைச் செய்யும்படி ஏவி பாவமான காரியங்களிலிருந்து அவர்களை விலக்கிக் கொண்டும் இருக்கட்டும்.

இத்தகையவர்கள்தாம் வெற்றி பெற்றவர்கள்.
(ஆலுஇம்ரான் 3:104)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களில் யாராவது ஒரு தவறைக் கண்டால் அதை தமது கரத்தால் மாற்றட்டும். அதுவும் இயலாவிட்டால் தமது நாவால் மாற்றட்டும் அதுவும் இயலாவிட்டால் உள்ளத்தால் (வெறுத்து விலகி விடட்டும்). இது ஈமானின் (நம்பிக்கையின்) குறைந்தபட்ச அளவாகும். (ஸஹீஹ் முஸ்லிம்)

மேலும் கூறினார்கள்: நம்பிக்கையாளர்கள் தங்களிடையே நேசம் கொள்வதற்கும், கருணை காட்டுவதற்கும், அன்பு செலுத்துவதற்கும் உதாரணம் ஓர் உடலைப் போல. உடலில் ஏதேனும் ஓர் உறுப்பு பாதிக்கப்பட்டால் அனைத்து உறுப்புகளும் காய்ச்சல் மற்றும் தூக்கமின்மையால் முறையிடுகின்றன.
(ஸஹீஹுல் புகாரி)

இன்று நமது சமுதாயத்தில் சிறியவர் முதல்

பெரியோர் வரை பெரும்பாலோர் சரியான மார்க்க ஞானத்திற்கும் முறையான வழிகாட்டலுக்கும் அதிகம் தேவை உள்ளவர்களாக இருப்பதை பார்க்கிறோம். ஆகவே மேற்கூறப்பட்ட இறை வசனங்கள் மற்றும் நபி மொழிக்கு இணங்க சமுதாய சீர்திருத்தப் பணியில் ஈடுபடுவது மார்க்கக் கடமை என்பதை உணர்ந்து அல்குர் ஆன் மற்றும் நபிவழியின் அடிப்படையில் அந்த உயர்ந்த பணியை நிறைவேற்றி இறை திருப்தியை அடைய வேண்டும் என்ற தூய எண்ணத்தில் தொடங்கப்பட்டதுதான் 'தாருல் ஹுதா'.

## தாருல் ஹுதாவின் பணிகளும் தொண்டுகளும்

### அழைத்தல்:

இதுவே இஸ்லாமின் அடிப்படையாகும். உலகில் இப்பணி இறைத்தூதர்கள் வாயிலாக நிலை நிறுத்தப்பட்டது. இறுதிஇறைத்தூதர் முஹம்மது ﷺ அவர்களுக்கு பின் அவர்களுடைய

சமுதாயத்தினர் அனைவரின் மீதும் இப்பணி கடமையாக்கப்பட்டது. மேன்மைமிகு குர்ஆனும் சிறப்புமிகு நபிமொழியும் இதன் அவசியத்தை வலியுறுத்துகின்றன. எனவே இயன்ற அளவு அனைத்து வழிகளிலும் மனித சமுதாயத்திற்கு இஸ்லாமை அறிமுகப்படுத்துவதும் அதன் உயர்வுகளை விளக்கிச் சொல்லி அதன் பக்கம் அழைப்பதும் தாருல் ஹுதாவின் முதல் பணியாகும்.

## கற்பித்தல்:

இஸ்லாமை அறிய விரும்பும் சிறுவர்கள் வாலிபர்கள் முதியவர்கள் ஆண்கள் பெண்கள் என அனைவருக்கும் மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழிகளை அவரவர் தகுதிக்கேற்ப கற்றுத்தருவது தாருல் ஹுதாவின் இரண்டாவது பணியாகும்.

## நூல் வெளியிடுதல்:

மேன்மைமிகு குர்ஆன் சிறப்புமிகு நபிமொழி

இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு சமுதாயப் பேரறிஞர்களால் அரபி மொழியில் எழுதப்பட்ட நூல்களை தமிழிலும் ஏனைய உலக மொழிகளிலும் மொழியாக்கம் செய்து அந்நூற்களைச் சலுகை விலையில் மக்களுக்கு வழங்குவது தாருல் ஹுதாவின் மூன்றாவது பணியாகும்.

**உதவுதல்:**

அல்லாஹு தஆலாவே அனைவரின் துன்பங்கள் அனைத்தையும் நிவர்த்தி செய்பவன். மிகப்பெரிய வள்ளலாகிய அல்லாஹ் தன் சார்பாக உலகில் ஏழை எளியோரின் துயர் துடைக்கும் வள்ளல் பெருமக்களுக்கு பெரும் வெகுமதிகளை ஈருலகிலும் வழங்குவதாக வாக்களித்துள்ளான். பிறர் துன்பங்களில் பங்கு பெறுவதும் பிறர் தேவைகளை நிறைவேற்ற இயன்றவரை உதவுவதும் முஸ்லிம்களுடைய அடிப்படை பண்புகளாகும்.

இந்த உன்னத பணிக்காக “பைத்துல்மால்” (பொது

நிதி) ஏற்பாடு செய்து இரக்க சிந்தையும் மார்க்கப் பற்றும் கொண்ட வள்ளல் பெருமக்களிடமிருந்து கடமையான உபரியான தர்மங்களை பெற்று அவற்றை தேவையுடையவர்களுக்கு வழங்குதல் தாருல் ஹுதாவின் நான்காவது பணியாகும்.

இந்தப் பணிகள் மட்டுமின்றி இஸ்லாம் முழுமை யாக ஒவ்வொருவரின் வாழ்விலும் வரவேண்டும் என்பதற்காக மனித சமுதாயம் நல்லுறவும் அன்பும் கருணையும் சமூகப் புரிந்துணர்வு ஏற்பட வேண்டும் என்பதற்காகவும் இயன்றவரை அல்லாஹ்வுக்காக தொண்டாற்ற வேண்டும் என்பது தாருல் ஹுதாவின் குறிக்கோளாகும்.

இப்பணிகள் அனைத்தும் தொய்வின்றி தொடர்ந்து சிறப்பாக, திறம்பட நடைபெறவும், அவற்றை அல்லாஹ் அங்கீகரிக்கவும் தாங்கள் துஆ செய்யும்படி அன்புடன் கேட்டுக் கொள்வதுடன், தங்களால் இயன்ற வரை இப்பணிகளில் பங்குபெறுமாறும் அழைக்கிறோம்.

# முன்னுரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடை யோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே! அவன் நிகரற்ற அன்புடையவன்; பாவங்களை மன்னிப்பவன்; கண்ணியமிக்கவன்; அனைவரையும் தனது அதிகாரத்திற்குள் வைத்திருப்பவன்; உள்ளங்களையும் பார்வைகளையும் புரட்டக் கூடியவன். என்றென்றும் காலையிலும் மாலையிலும் அவனையே நான் புகழ்கிறேன்.

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு இணை துணை அறவே இல்லை என்று நான் உறுதியுடன் சாட்சி கூறுகிறேன். இந்த சாட்சி அதைக் கூறுபவருக்கு நரக நெருப்பை விட்டும் பாதுகாப்பு அளிக்கிறது. மேலும், நிச்சயமாக முஹம்மது ﷺ அல்லாஹ்வுடைய தூதர் என்று சாட்சி கூறுகிறேன்.

அல்லாஹ்வே... முஹம்மது ﷺ அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தார், மனைவிமார், தோழர் கள் அனைவருக்கும் அருளையும் ஈடேற்றத் தையும் நிரந்தரமாக வழங்குவாயாக!

ஒரு முஸ்லிம் தமது அன்றாட வாழ்க்கையில் எத்தனையோ விஷயங்களின் பக்கம் கவனம் செலுத்துகிறார். ஆனால், அவை அனைத்திலும் மிக முக்கியமானது நபி ﷺ அவர்களின் வழி முறைகளைப் பேணுவதாகும். ஒவ்வொரு முஸ்லிமும் தமது அசைவு, அமைதி, சொல், செயல் அனைத்திலும் நபி ﷺ அவர்களின் வழிமுறைகளை அவசியம் பின்பற்ற வேண்டும்.

அல்லாஹ்வின் மீது நாம் வைக்கும் அன்பு உண்மையென்றால், நாம் அவனது அன்பிற்குரிய முஹம்மது ﷺ அவர்களை பின்பற்ற வேண்டும். அவர்களது பண்புகள், செயல்கள், கட்டளைகள், வழிமுறைகள் அனைத்தையும் ஏற்று அமல் படுத்த வேண்டும்.

இதைப்பற்றி அல்லாஹ் தஆலா கூறுகிறான்:

قُلْ إِنْ كُنْتُمْ تُحِبُّونَ اللَّهَ فَاتَّبِعُونِي يُحْبِبْكُمُ اللَّهُ وَيَغْفِرْ لَكُمْ ذُنُوبَكُمْ وَاللَّهُ غَفُورٌ رَحِيمٌ (31)

“(நபியே! மனிதர்களை நோக்கி) நீங்கள் கூறுங்கள்: “நீங்கள் உண்மையாகவே அல்லாஹ்வை நேசிப்ப வர்களாக இருந்தால் என்னைப் பின்பற்றுங்கள். உங்களை அல்லாஹ் நேசிப்பான்; உங்கள் பாவங்களையும் அவன் மன்னித்து விடுவான். அல்லாஹ் அதிகம் மன்னிப்பவனும், நிகரற்ற அன்புடையவனுமாக இருக்கின்றான்.”

(ஆலு இம்ரான் 3:31)

நம்பிக்கையாளர்கள் அல்லாஹ்வின் மீது வைத்தி ருக்கும் அன்பு, அவனது தூதர் முஹம்மது ﷺ அவர்களைப் பின்பற்றுவதன் மூலமே வெளிப்படுகிறது என இந்த வசனத்திலிருந்து அறிகிறோம்.

ஒரு நம்பிக்கையாளரின் அந்தஸ்து, அவர் நபி ﷺ அவர்களை எந்தளவு பின்பற்றுகிறார் என்பதைக் கவனித்தே முடிவு செய்யப்படுகிறது. நபி ﷺ அவர்களின் வழிமுறைகளை அந்த நம்பிக்கையாளர் எந்தளவு அதிகம் பின்பற்றுகிறாரோ அந்தளவு அல்லாஹ்விடத்தில் உயர்வும் மதிப்பும் மிக்கவராக இருப்பார்.

இந்த உயரிய நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டே இந்த சிறிய ஆய்வைக் கோர்வை செய்து உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன். இதில் வணக்க வழிபாடுகள், தூக்கம், உண்பது, குடிப்பது, பழகுவது, சுத்தம் செய்வது, வீடு மற்றும் பள்ளிக்குள் நுழைவது, வெளியேறுவது, ஆடை அணிவது போன்ற எல்லா நிலைகளிலும் கடைப்பிடிக்க வேண்டிய ஸுன்னத்துகளை (நபி வழிகளை) எடுத்து எழுதியுள்ளேன்.

நம்மில் ஒருவருக்கு ஒரு தொகை தவறிவிட்டால் அதைத் தேடி எடுப்பதற்காக எந்தளவு சிரமமும்

முயற்சியும் மேற்கொள்கிறோம்! அதைக் கண்டெடுக்கும் வரை நிம்மதியற்று தவிக்கிறோம். ஆனால், இன்று நாம் ஸுன்னத்தைக் கடைப் பிடிப்பதற்காக, எடுத்து நடப்பதற்காக ஏதும் முயற்சி செய்கிறோமா?

அன்றாட வாழ்க்கையில் உலகச் செல்வங்களுக்கே அதிக முக்கியத்துவம் அளிக்கிறோம். நபி ﷺ அவர்களின் வழிமுறைகளுக்கு முக்கியத்துவம் அளிப்பதில்லை. ஒவ்வொரு ஸுன்னத்தை எடுத்து நடப்பதற்கும் ஒரு குறிப்பிட்ட தொகை வெகுமதியாக வழங்கப்படும் என்று அறிவிப்பு செய்தால் மக்களின் நிலை எப்படி இருக்கும்? போட்டி போட்டவர்களாக ஸுன்னத்தைப் பின்பற்றுவார்கள். சிந்திக்க வேண்டாமா? இந்தப் பணம், பொருள் நாளை கப்ரு குழியில் -மண்ணறையில் நமக்கு என்ன பலனைத் தரமுடியும்?

بَلْ تُؤْثِرُونَ الْحَيَاةَ الدُّنْيَا (16)
وَالْآخِرَةُ خَيْرٌ وَأَبْقَى (17)

எனினும், நீங்களோ (மறுமையை விட்டு விட்டு) இவ்வுலக வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றீர்கள். மறுமையின் வாழ்க்கைதான் மிக்க மேலானதும் நிலையானதுமாகும்.

(அல்அஃலா 87:16, 17)

மார்க்கச் சட்டப்படி ஸுன்னத்தை விடுவது தண்டனைக்குரிய குற்றம் இல்லை. ஆனால், அதனைப் பேணி நடந்தால் அளவிலா நன்மை வழங்கப்படும். ஒவ்வொரு நாளும் தொடர்ந்து வரும் பல ஸுன்னத்துகளைப் பற்றியே இந்நூலில் குறிப்பிடப்படுகிறது. அவை ஒவ்வொன்றும் நாம் எடுத்து செயல்படுத்துவதற்கு மிக சாத்தியமானவையே!

ஒருவர் அன்றாட வாழ்க்கையில் உள்ள நபி வழிகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று ஆர்வம் காட்டினால், குறைந்தது ஆயிரம்

நபிவழிகளைக் கடைப்பிடிக்கலாம். அத்தகைய ஸுன்னத்துகளைக் கடைப்பிடிப்பதற்கு ஓர் இலகுவான வழியை விளக்கமாகக் கூறுவதற்கே இந்நூல் எழுதப்படுகிறது.

நாள் ஒன்றுக்கு ஆயிரம் ஸுன்னத்துகள் என்றால் ஒரு மாதத்திற்கு முப்பதாயிரம் ஸுன்னத்துகள். ஸுப்ஹானல்லாஹ்! எவ்வளவு மகத்தான நன்மைகள்! இந்த ஸுன்னத்துகளை ஒருவர் அறியாமல் இருப்பது எவ்வளவு பெரிய கைசேதம்! அல்லது அறிந்த பின் அதைச் செயல்படுத்தாமல் இருப்பது எவ்வளவு பெரிய நஷ்டம்! எவ்வளவு உயர்வுகளையும் நன்மைகளையும் இவர்கள் இழந்து விடுகிறார்கள். உண்மையில், இவர்களே இழப்பிற்குரியவர்கள்.

## நபிவழியைக் கடைப்பிடிப்பதனால் ஏற்படும் பலன்களில் சில...

(1) அல்லாஹ்வின் அன்பு கிடைக்கிறது.

(2) கடமையான வணக்கங்களில் ஏற்படும் குறைகள் நிவர்த்தி செய்யப்படுகின்றன.

(3) அனாசாரங்கள் மற்றும் தவறான சடங்குகளை விட்டும் தவிர்ந்து இருக்க முடிகிறது.

(4) அல்லாஹ்வின் அடையாளச் சின்னங்களைக் கண்ணியப்படுத்திய நன்மை கிடைக்கிறது.

முஸ்லிம்களே! அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள். வாழ்க்கையில் நபி ﷺ அவர்களின் வழிமுறைகளை பின்பற்றுங்கள்! அவற்றை நீங்கள் பின்பற்றவில்லையெனில் வேறு யார் பின்பற்றுவார்கள்?

ஸுன்னத்துகளை பின்பற்றுவதுதான் நபி ﷺ அவர்கள் மீது நாம் வைத்திருக்கும் அன்பின் உண்மையான அடையாளமாகும். நாம் அவர்களை பின்பற்றுகிறோம் என்பதற்கு அதுவே உண்மையான ஆதாரமுமாகும்.

**குறிப்பு:** சுருக்கத்தை கருத்தில் கொண்டு இங்கு

கூறப்படும் நபிமொழிகளுக்கு அதன் அறிவிப்பாளர் பெயரையும் அதன் எண்ணையும் குறிப்பிடவில்லை.

இதில் கூறப்படும் அனைத்து ஹதீஸ்களும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஆதாரமிக்க ஹதீஸ்களே!

---------

# தூக்கத்தை விட்டு எழும்போது கடைப்பிடிக்க வேண்டிய ஸுன்னத்துகள்

**1. விழித்தவுடன் முகத்திலிருந்து தூக்கத்தின் அடையாளத்தை கையால் துடைப்பது.**

“நபி ﷺ அவர்கள் விழித்தவுடன் தங்களது கரத்தால் தூக்கத்தை முகத்திலிருந்து துடைப் பார்கள்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

அதாவது, தூக்கத்தால் முகத்தில் இருக்கும் அசதி மற்றும் சோர்வை துடைப்பார்கள். அவ்வாறு துடைப்பதால் சுறுசுறுப்பும் உற்சாகமும் ஏற்படுகின்றன.

**2. பிறகு இந்த துஆவை ஓத வேண்டும்.**

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ أَحْيَانَا بَعْدَ مَا أَمَاتَنَا وَإِلَيْهِ النُّشُوْرُ

பொருள்: “எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே!

அவனே நம்மை மரணிக்கச் செய்து பிறகு உயிர் கொடுத்தான். எழுப்பப்படுவதும் அவனிடமே.”
(ஸஹீஹுல் புகாரி)

### 3. பல் துலக்குவது.

“நபி ﷺ அவர்கள், இரவில் தூக்கத்தை விட்டு விழித்தால் பல் துலக்குவார்கள்.”
(ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

### 4. தண்ணீரால் மூக்கைச் சுத்தம் செய்வது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “நீங்கள் தூக்கத்தை விட்டு விழித்தால் தண்ணீரின் மூலம் மூக்கை மூன்றுமுறை சுத்தம் செய்யுங்கள். நிச்சயமாக ஷைத்தான் மூக்குத்தண்டில் இரவு தங்கி இருக்கின்றான்.”
(ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

### 5. இரு கைகளையும் மூன்றுமுறை கழுவுவது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “நீங்கள் தூக்கத்தை விட்டு விழித்தால் கையை

மூன்றுமுறைக் கழுவாமல் பாத்திரத்திற்குள் நுழைக்க வேண்டாம்.”

(ஸஹீஹுல் புகாரி, ஸஹீஹ் முஸ்லிம்)

---------

# கழிவறைக்குள் நுழைவது மற்றும் வெளியேறுவதின் ஸுன்னத்துக்கள்

1. கழிவறைக்குள் இடது காலை எடுத்து வைத்து நுழைய வேண்டும். வலது காலை எடுத்து வைத்து வெளியேற வேண்டும்.

2. நுழைவதற்கு முன் இந்த துஆவை ஓத வேண்டும்.

بِسْمِ اللهِ اَللّٰهُمَّ إِنِّـيْ أَعُوْذُ بِكَ مِنَ الْخُبُثِ وَالْخَبَائِثِ

பொருள்: "அல்லாஹ்வே! கெட்ட ஆண், பெண் ஷைத்தான்களை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்." (ஸஹீஹுல் புகாரி)

3. வெளியேறிய பிறகு இந்த துஆவை ஓத வேண்டும்.

غُفْرَانَكَ

பொருள்: “உனது மன்னிப்பைக் கேட்கிறேன்”
(ஸுனன் அபூதாவுது)

(4) ஒவ்வொரு பகலிலும் இரவிலும் பலமுறை கழிவறைக்குச் செல்கிறோம். உள்ளே செல்லும் போது இரு ஸுன்னத்துகளை வெளியே வரும் போது இரு ஸுன்னத்துக்களையும் நபி ﷺ அவர்கள் கற்றுக் கொடுத்துள்ளார்கள். நாம் அவற்றைப் பின்பற்றினால் ஒவ்வொரு நாளும் இந்த ஸுன்னத்துகளைப் பலமுறை பேணியவர் களாவோம்.

---------

# உளூவின் ஸுன்னத்துகள்

1. بِسْمِ اللّٰهِ

என்று கூறி உளூவை ஆரம்பிப்பது.

பொருள்: (அல்லாஹ்வின் பெயரால்..)

2. இரண்டு கைகளையும் மணிக்கட்டு வரை மூன்றுமுறை கழுவுவது.

3. முகத்தைக் கழுவுவதற்கு முன் வாய் கொப்பளிப்பது; மூக்குக்குத் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்வது.

4. இடது கையால் மூக்கைச் சுத்தம் செய்வது.

“நபி ﷺ அவர்கள் மூன்றுமுறை மணிக்கட்டு வரை கழுவினார்கள். பிறகு வாய் கொப்பளித்தார்கள். மூக்குக்குத் தண்ணீர் செலுத்தி சுத்தம் செய்தார்கள். பிறகு மூன்றுமுறை முகத்தை கழுவினார்கள்.” (ஸஹீஹுல் புகாரி)

5. நல்ல முறையில் வாய் கொப்பளிப்பது: நல்ல முறையில் மூக்கைச் சுத்தம் செய்வது இவற்றை நோன்பாளி செய்யக் கூடாது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நீங்கள் நோன்பாளியாக இல்லையென்றால், நல்ல முறையில் வாய் கொப்பளியுங்கள் மூக்கைச் சுத்தம் செய்யுங்கள்." (ஸுனன் அபூதாவூத்)

நல்ல முறையில் என்பதற்குப் பொருள், வாய் நிரம்ப தண்ணீர் செலுத்தி கொப்பளிப்பதாகும். அவ்வாறே மூக்குக்குத்தண்டு வரை தண்ணீரை உறிஞ்சி சுத்தம் செய்வதாகும்.

6. ஓர் உள்ளங்கையில் எடுத்த தண்ணீரை கொண்டே வாய் மற்றும் மூக்கை சுத்தம் செய்து வேண்டும்.

"பின்பு நபி ﷺ அவர்கள் பாத்திரத்தினுள் கையை நுழைத்து தண்ணீர் எடுத்து ஒரு கை தண்ணீரைக் கொண்டே வாய்க்கும் மூக்கிற்கும் செலுத்தினார்கள்." (ஸஹீஹுல் புகாரி)

7. வாய் கொப்பளிக்கும் சமயம் (ஸிவாக்) பல் துலக்க வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நான் எனது சமுதாயத்திற்குச் சிரமம் அளித்துவிடுவேன் என்று இல்லையாயின் ஒவ்வொரு தொழுகைக்கும் பல் துலக்கிக் கொள்ளுங்கள் என்று அவர்களுக்குக் கட்டளையிட்டிருப்பேன்." (ஸுனனுன் நஸாயி)

8. முகம் கழுவும்போது அடர்த்தியான தாடியைக் கோதிக் கழுவுவது.

"நபி ﷺ அவர்கள் உளுச் செய்யும் சமயம் தமது தாடியைக் கோதிக் கழுவுவார்கள்."

(ஜாமிவுத் திர்மிதி)

9. தலைக்கு மஸ்ஹ் செய்வது: அதன் முறையாவது, தண்ணீரில் நனைந்த கைகளைக் கொண்டு தலையின் முன்பகுதியிலிருந்து ஆரம்பித்து, பின்பகுதி வரை தடவிச் சென்று பிறகு, பின்பகுதியில் இருந்து முன்பகுதி வரை மீண்டும் கொண்டு வருவதாகும். இவ்வாறு

செய்வது ஸுன்னத்தாகும். பொதுவாக தலை அனைத்திற்கும் எந்த முறையிலாவது மஸ்ஹ் செய்வது கட்டாயமாகும்.

“நபி ﷺ அவர்கள் தலைக்கு மஸ்ஹ் செய்தார்கள். தங்களது கைகளை முன்னும் பின்னும் தடவினார்கள்.” (ஸஹீஹுல் புகாரி)

10. கை மற்றும் கால் விரல்களைக் கோதிக் கழுவுவது.

“நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “உளூவை முழுமையாகச் செய்யுங்கள்; விரல்களைக் கோதிக் கழுவுங்கள்.” (ஜாமிவுத் திர்மிதி)

11. கை, கால்களைக் கழுவும்போது வலது பக்கத்தை முதலில் கழுவுவது.

“செருப்பு அணிவது, சுத்தம் செய்வது ஆகிய அனைத்திலும் நபி ﷺ அவர்கள் வலது பக்கம் ஆரம்பிப்பதையே அதிகம் விரும்புவார்கள்.” (ஸஹீஹுல் புகாரி)

12. முகம், கை, கால்களை மூன்றுமுறை கழுவுவது.

13. உளூ செய்து முடித்தவுடன் இந்த துஆவை ஓத வேண்டும்.

أَشْهَدُ أَن لَّا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُوْلُهُ

பொருள்: "அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற் குரியவன் வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன் அவனுக்கு இணை துணை இல்லை என்று நான் சாட்சி சொல்கிறேன்: நிச்சயமாக முஹம்மது அவனுடைய அடிமையும் தூதரும் ஆவார்கள் என்றும் சாட்சி சொல்கிறேன்."

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "இவ்வாறு செய்வதால் சொர்க்கத்தின் எட்டு கதவுகளும் திறக்கப்படுகின்றன. நாடியதில் நுழைந்து கொள்ளலாம்." (ஸஹீஹ் முஸ்லிம்)

14. மஸ்ஜிதிற்குச் செல்லும்போது வீட்டில் உளூச் செய்துவிட்டுச் செல்வது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "யார் ஒருவர் தமது வீட்டில் உளூச் செய்த பிறகு அல்லாஹ் கடமையாக்கிய தொழுகையை நிறைவேற்ற பள்ளிக்குச் செல்கிறாரோ அவரின் ஒரு காலடிக்கு ஒரு பாவம் மன்னிக்கப்பட்டு, மற்றொரு காலடிக்கு ஒரு பதவியும் உயர்த்தப்படுகிறது."
(ஸஹீஹ் முஸ்லிம்)

15. தண்ணீர் ஊற்றும்போது அல்லது ஊற்றிய பிறகு உறுப்புகளைக் கையால் தேய்த்துக் கழுவுவது.

16. தண்ணீரை விரயம் செய்யாமலும், குறைக்காமலும் ஒரு நடுநிலையோடு தேவைக்குத் தகுந்தாற்போல் உபயோகிப்பது.

"நபி ﷺ அவர்கள் ஒரு முத்து[1] அளவு தண்ணீரில்

---

1. முத்து என்றால் இருகைகள் நிரம்ப உள்ள தண்ணீரில் நான்கு மடங்கு அளவாகும்.

உளூச் செய்யும் பழக்கம் உள்ளவர்களாக இருந்தார்கள்.”

17. இரு கைகளையும் கால்களையும் கழுவும் போது கடுமையான அளவை விட அதிகம் கழுவுவது. அதாவது முட்டிக் கைக்கு மேலும் கரண்டைக் காலுக்கு மேலும் கழுவுவது.

அபூஹுரைரா (ரழி) அவர்கள் உளூச் செய்யும் போது கைகளை முட்டிக்கைக்கு மேல் வரையிலும் கழுவினார்கள். அவ்வாறே காலையில் கரண்டைக்கு மேல் கெண்டைக்கால் வரை கழுவினார்கள். “இவ்வாறுதான் நபி ﷺ அவர்கள் உளூச் செய்ததை நான் பார்த்தேன் என்றும் அவர்கள் கூறினார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

18. உறுதி செய்த பிறகு இரண்டு ரக்அத்துகள் தொழுவது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “யார் ஒருவர் நான் உளூச் செய்தது போன்று உளூச்செய்து விட்டு எவ்வித மன ஊசலாட்டமும் இல்லாமல்

இரண்டு ரக்அத் தொழுவாரோ அவரின் முந்தைய பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்பட்டுவிடும்.”
(ஸஹீஹுல் புகாரி)

இமாம் முஸ்லிம் அறிவிக்கும் மற்றொரு அறிவிப்பில் “அவருக்கு சுவனம் கட்டாயமாக கிடைத்துவிடும்” என்று வந்துள்ளது.

19. உளூவைக் குறைவின்றி முழுமையாகச் செய்வது.

ஒவ்வொரு முஸ்லிமும் இரவு பகலில் பலமுறை உளூச் செய்கிறார்கள். சிலர் 5 முறை, சிலர் அதை விடவும் அதிகமாக இவ்வாறு எத்தனை முறை உளூச் செய்கிறார்களோ அத்தனை முறையும் நபி ﷺ அவர்களின் இந்த ஸுன்னத்துகளைப் பின்பற்றும்போது மாபெரும் நன்மைகளைப் பெற்றுக் கொள்கிறார்கள்.

உளூவின்போது மேற்கூறப்பட்ட ஸுன்னத்துகளை பேணினால் கீழ்காணும் சிறப்புகளை நாம் பெறுகிறோம்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "யார் உளூவை அழகிய முறையில் செய்வாரோ அவர் செய்த பாவங்கள் அவர் உடலை விட்டு அகன்று விடுகின்றன. எந்தளவு என்றால் அவரது நகங்கள் வழியாகவும் அவை வெளியேறி விடுகின்றன." (ஸஹீஹ் முஸ்லீம்)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "ஒருவர் அழகிய முறையில் உளூச் செய்து மன ஓர்மையுடன் இரண்டு ரக்அத்துக்கள் தொழுதால் அவர் கண்டிப்பாக சொர்க்கத்தை அடைவதுடன் இறைவனின் மன்னிப்பையும் பெறுகிறார்."

(ஸஹீஹ் முஸ்லிம்)

---------

# ஸிவாக் - பல் துலக்குதல்

நாம் இரவிலும் பகலிலும் பலமுறைப் பல் துலக்க வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நான் எனது சமுதாயத்தைச் சிரமத்தில் ஆழ்த்தி விடுவேன் என்று எண்ணவில்லையெனில், ஒவ்வொரு தொழுகைக்கும் பல் துலக்குவதை அவர்களுக்கு நான் கட்டாயமாக்கி இருப்பேன்."

(ஸஹீஹுல் புகாரி)

அவசியம் ஸிவாக் செய்ய வேண்டிய நேரங்கள்:

(1) ஐந்து நேரத் தொழுகைகள்.

(2) ஸுன்னத் தொழுகைகள்.

(3) ழுஹா தொழுகை.

(4) வித்ர் தொழுகை.

(5) வீட்டிற்குள் சென்றவுடன்.

“நபி ﷺ அவர்கள் வீட்டிற்கு வந்தவுடன் பல் துலக்கிக் கொள்வார்கள் என்று ஆயிஷா (ரழி) அவர்கள் கூறினார்கள்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

(6) குர்ஆன் ஓதும்போது.

(7) வாயின் வாடை மாறும்போது.

(8) தூக்கத்திலிருந்து எழுந்தவுடன்.

(9) உளுச் செய்யும்போது.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “பல் துலக்குவது வாயைச் சுத்தப்படுத்துகிறது இறைவனின் மகிழ்ச்சிக்குக் காரணமாகிறது.”

(முஸ்னது அஹ்மது)

நபி ﷺ அவர்கள் பயன்படுத்திய “அராக்” என்ற மரத்தின் குச்சியைக் கொண்டு பல்துலக்குவது பெரும் பலன்களைத் தருகிறது என இன்றைய மருத்துவ ஆய்வில் கண்டு பிடித்துள்ளார்கள்.

அ. அக்குச்சியில் பாக்டீரியா (தீய கிருமி)களை கொல்லும் சக்தி உள்ளது.

ஆ.வாயைச் சுத்தம் செய்யும் சக்தி உள்ளது.

இ. பற்களின் கறைகளை அகற்றும் சக்தி உள்ளது.

ஈ. வாயை நறுமணப்படுத்தக்கூடிய சக்தி உள்ளது.

---------

# செருப்பு அணிவதின் ஸுன்னத்துகள்

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “உங்களில் ஒருவர் செருப்பை அணியும்போது முதலில் வலது காலில் அணியட்டும்; கழற்றும் போது இடது காலில் இருந்து கழற்றவும். இரண்டு கால்களுக்கும் காலணிகளை அணியட்டும்; அல்லது இரண்டு கால்களிலிருந்தும் கழற்றி விடட்டும்!” (ஸஹீஹ் முஸ்லிம்)

காலணி அணிவதும் கழற்றுவதும் ஒவ்வொரு நாளும் பலமுறை ஏற்படுகின்றன. வீட்டை விட்டு வெளியே செல்லும்போது, வீட்டுக்குள் வரும்போது, பள்ளியை விட்டு வெளியே செல்லும்போது, பள்ளிக்குள் வரும்போது, கழிப்பிடங்களுக்குச் செல்லும்போது, அங்கிருந்து வெளியேறும்போது என பல நேரங்களில் அணிவதும் கழற்றுவதும் ஏற்படுகின்றன. இதைத் தவிர மேலும் பல சமயங்களில் அணிகிறோம்;

கழற்றுகிறோம். அப்போது அந்த செயலை ஸுன்னத்து என்ற எண்ணத்துடன் கடைப்பிடிக்கும் போது மாபெரும் நன்மையை அடைந்து கொள்கிறோம்.

---------

# ஆடை அணிவதின் ஸுன்னத்துகள்

ஒவ்வொரு நாளும் பல தேவையை முன்னிட்டு பலமுறை ஆடையை அணிவதும் கழற்றுவதும் அவசியமாகின்றன.

1. கழற்றும் போதும் அணியும் போதும்...

بِسْمِ اللّٰهِ

என்று சொல்ல வேண்டும்.

பொருள்: (அல்லாஹ்வின் பெயரால்...)

எந்தச் செயலை ஆரம்பித்தாலும் "பிஸ்மில்லாஹ்" சொல்வது சிறப்பிற்குரியது என இமாம் நவவி (ரஹ்) கூறுகிறார்கள்.

(2) ஆடை அல்லது சட்டை அல்லது போர்வை அல்லது தலைப்பாகையை நபி ﷺ அணியும்போது,

اَللّٰهُمَّ اِنِّي أَسْأَلُكَ مِنْ خَيْرِهِ وَخَيْرِ مَاهُوَ لَهُ
وَاَعُوْذُبِكَ مِنْ شَرِّهِ وَشَرِّ مَاهُوَ لَهُ

என்று கூறுவார்கள்.

பொருள்: அல்லாஹ்வே! இதன் நன்மையில் இருந்தும், இது எதற்காக இருக்கிறதோ அதன் நன்மையிலிருந்தும் உன்னிடம் கேட்கிறேன். இதன் தீமையை விட்டும், இது எதற்காக இருக்கிறதோ அதன் தீமையை விட்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.
(ஸுனன் அபூதாவூத்)

(3) வலது பக்கமாக அணிய வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: “நீங்கள் அணியும் போது வலது பக்கங்களைக் கொண்டு ஆரம்பியுங்கள்.” (ஸுனன் அபூதாவூது)

(4) ஆடைகளை கழற்றும் போது இடது பக்கத்திலிருந்து கழற்ற வேண்டும்.

# வீடிற்குள் நுழைவது மற்றும் வெளியேறுவதின் ஸுன்னத்துகள்

بِسْمِ اللّٰهِ

என்று சொல்ல வேண்டும்.

மேலும், அதிகம் அல்லாஹ்வை நினைவு கூர்வதும், ஸலாம் சொல்வதும் வீட்டில் நுழையும்போது கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் என இமாம் நவவி (ரஹ்) கூறுகிறார்கள்.

1. அல்லாஹ்வை நினைவு கூர்வது.

நபி ﷺ கூறினார்கள்: “ஒருவர் தம் வீட்டிற்குள் நுழையும் போது, உணவு சாப்பிடும் போது அல்லாஹ்வை நினைவு கூர்ந்தால், உங்களுக்கு இங்கு இரவு தங்க இடமுமில்லை; இரவு உணவுமில்லை” என்று ஷைத்தான் (தனது தோழர்களிடம்) கூறுகிறான்.(ஸஹீஹ் முஸ்லிம்)

பிறகு இந்த துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ إِنِّي أَسْأَلُكَ خَيْرَ الْمَوْلَجِ، وَخَيْرَ الْمَخْرَجِ، بِسْمِ اللّٰهِ وَلَجْنَا، وَبِسْمِ اللّٰهِ خَرَجْنَا، وَعَلَى اللّٰهِ رَبِّنَا تَوَكَّلْنَا.

பொருள்: "அல்லாஹ்வே உன்னிடம் நான் நுழையும் இடத்தில் இருக்கும் நன்மையையும், வெளியேறும் இடத்தில் இருக்கும் நன்மையையும் கேட்கிறேன். அல்லாஹ்வின் பெயர் கூறியே நுழைந்தோம்; அல்லாஹ்வின் பெயர் கூறியே வெளியே சென்றோம். எங்கள் இறைவனான அல்லாஹ்விடமே பொறுப்பு ஒப்படைத்தோம்."

பிறகு குடும்பத்தினருக்கு ஸலாம் கூறவேண்டும். (ஸுனன் அபூதாவூது)

இந்த துஆவிலிருந்து தெரிய வருவதாவது:

ஓர் இடத்தில் நுழையும் போதும் அதை விட்டு வெளியேறும் போதும் அல்லாஹ்விடம் பொறுப்பு ஒப்படைத்தவர்களாக நாம் இருக்க

வேண்டும். இந்த உணர்வு நம்மில் இருக்கும் போது அல்லாஹ்வுடன் எப்போதும் தொடர்புள்ளவர்களாக இருப்போம்.

(3) பல் துலக்குவது.

நபி ﷺ அவர்கள் வீட்டில் நுழைந்தால் முதலில் பல் துலக்குவார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

(4) “ஸலாம்” - முகமன் கூறுவது:

அல்லாஹ் கூறுகிறான்:

فَإِذَا دَخَلْتُمْ بُيُوْتًا فَسَلِّمُوْا عَلٰى أَنْفُسِكُمْ تَحِيَّةً مِنْ عِنْدِ اللّٰهِ مُبَارَكَةً طَيِّبَةً

“நீங்கள் எந்த வீட்டில் நுழைந்த போதிலும் அல்லாஹ்வினால் உங்களுக்குத் கற்பிக்கப்பட்ட மிக்க பாக்கியமுள்ள பரிசுத்தமான (ஸலாம் என்ற) வாக்கியத்தை உங்களுக்குள் (ஒருவருக்கு மற்றொருவர்) கூறிக் கொள்ளவும்.”

(அல்குர்ஆன் 24:61)

குறைந்தபட்சம் ஒருவர் ஐந்து முறையாவது வீட்டிற்குள் நுழைகிறார். ஒவ்வொரு முறையும் நான்கு ஸுன்னத்துகள் என்றால் ஒரு நாளைக்கு வீட்டில் நுழைவதில் மட்டும் இருபது ஸுன்னத்துகளை கடைப்பிடித்த நன்மைகள் உண்டு.

வீட்டை விட்டு வெளியேறும்போது இந்த துஆவை ஓத வேண்டும்.

بِسْمِ اللّٰهِ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ وَلَاحَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰه

பொருள்: "அல்லாஹ்வின் பெயர் கூறி வெளியேறுகிறேன்; அல்லாஹ்விடம் பொறுப்பு ஒப்படைக்கிறேன். தப்பிக்க முடியாது; ஆற்றல் பெற முடியாது; அல்லாஹ்வைக் கொண்டே தவிர! என்று கூறிவெளியே செல்லும்போது "இது உனக்கு போதுமானது. நீ பாதுகாக்கப்பட்டாய்; நேர்வழி காட்டப்பட்டாய்" என்ற பதில் சொல்லப்படுகிறது. ஷைத்தானும் அவரை விட்டு அகன்று கொள்கிறான். (ஜாமிவுத் திர்மிதி)

ஒவ்வொரு நாளும் பலமுறை வீட்டை விட்டு வெளியே செல்கிறோம். தொழுகைக்காக வெளியே செல்கிறோம். ஒவ்வொரு முறை வெளியே செல்லும்போதும் இந்த ஸுன்னத்து களை நிறைவேற்றினால் மகத்தான நன்மையை அடைந்து கொள்வோம்.

**வீட்டை விட்டு வெளியேறும் போது கடைப் பிடிக்கப்படும் ஸுன்னத்துகளால் ஏற்படும் பலன்கள்:**

(அ) இம்மை மறுமையின் காரியங்கள் நிறைவேற்றப்படுகின்றன.

(ஆ) மனிதன் மற்றும் ஜின்களின் தீங்குகளை விட்டும் சிரமங்களை விட்டும் பாதுகாப்பு கிடைக்கிறது.

(இ) மார்க்க விஷயத்திலும், உலக விஷயத்திலும் அல்லாஹ் வழி காட்டுகிறான்.

---------

# மஸ்ஜிதுக்குச் செல்வதின் ஸுன்னத்துகள்

## 1. பள்ளிக்கு முன்கூட்டியே செல்வது.

நபி ﷺ கூறுகிறார்கள்: "அதான் சொல்வது, முதல் வரிசையில் தொழுவது ஆகிய இரண்டின் நன்மைகளையும் மக்கள் அறிந்து கொண்டால் அதற்காகப் போட்டி போட்டுக் கொள்வார்கள். இதனால் அவர்களுக்குள் சீட்டு குலுக்கிப் போட வேண்டிய நிலையும் வரலாம். விரைவாக முன்கூட்டியே பள்ளிக்கு வருவதின் நன்மையை மக்கள் அறிந்து கொண்டால் அதற்காக ஒருவர் மற்றவரை முந்திக் கொள்வார்கள். இஷா மற்றும் ஸுப்ஹ் தொழுகையில் உள்ள நன்மையை மக்கள் அறிந்து கொண்டால் அதற்காகக் கால்களைத் தேய்த்துக் (தவழ்ந்து) கொண்டாவது வந்து விடுவார்கள்." (ஸஹீஹுல் புகாரி)

## 2. பள்ளிக்குச் செல்லும்போது இந்த துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ اجْعَلْ فِيْ قَلْبِيْ نُوْرًا وَّفِيْ لِسَانِيْ نُوْرًا وَّفِيْ سَمْعِيْ نُوْرًا وَّفِيْ بَصَرِيْ نُوْرًا وَّمِنْ فَوْقِيْ نُوْرًا وَّمِنْ تَحْتِيْ نُوْرًا وَّعَنْ يَّمِيْنِيْ نُوْرًا وَّعَنْ شِمَالِيْ نُوْرًا وَّمِنْ أَمَامِيْ نُوْرًا وَّمِنْ خَلْفِيْ نُوْرًا وَّاجْعَلْ فِيْ نَفْسِيْ نُوْرًا وَّأَعْظِمْ لِيْ نُوْرًا وَّعَظِّمْ لِيْ نُوْرًا وَّاجْعَلْ لِّيْ نُوْرًا وَّاجْعَلْنِيْ نُوْرًا اَللّٰهُمَّ أَعْطِنِيْ نُوْرًا

பொருள்: "அல்லாஹ்வே! எனது உள்ளத்தில் ஒளியை ஏற்படுத்து! எனது நாவிலும் ஒளியை ஏற்படுத்து! எனது செவியிலும் ஒளியை ஏற்படுத்து! எனது பார்வையிலும் ஒளியை ஏற்படுத்து! எனக்குப் பின்னாலும் ஒளியை

முன்னாலும் ஒளியை ஏற்படுத்து! எனக்கு மேலிருந்தும் ஒளியைக் கீழிருந்தும் ஒளியை ஏற்படுத்து! அல்லாஹ்வே எனக்கு ஒளியை வழங்கு! (ஸஹீஹ் முஸ்லிம்)

## 3. அமைதியாகவும், கண்ணியமாகவும் நடந்து செல்ல வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "நீங்கள் இகாமத் சொல்லப்படுவதைக் கேட்டால் அமைதியுடனும் கண்ணியத்துடனும் தொழுகைக்கு நடந்து செல்லுங்கள்." (ஸஹீஹுல் புகாரி)

அமைதி என்றால் வீணான செயல்களைத் தவிர்த்து நிதானத்துடன் செல்வது. கண்ணியம் என்றால் பார்வையைத் தாழ்த்தி, சப்தமின்றிச் செல்வது, அங்கும் இங்கும் பார்ப்பதைத் தவிர்த்துக் கொள்வது.

## 4. பள்ளிக்கு நடந்து செல்வது.

மார்க்க அறிஞர்கள் கூறுவதாவது: பள்ளிக்குச் செல்லும்போது அவசரமின்றி மெதுவாகவும்

எட்டுகளை நெருக்கமாகவும் எடுத்து வைத்து நடந்து செல்வதால் நன்மைகள் ஏராளம் உண்டு.

“அல்லாஹ், பாவங்களை அழித்து, அந்தஸ்து களை உயர்த்தும் ஒரு வழியை நான் உங்களுக்கு அறிவிக்கட்டுமா?” என்று நபி ﷺ கேட்டார்கள். உடனே தோழர்கள், “ஆம், அல்லாஹ்வின் தூதரே! அறிவித்துத் தாருங்கள்” என்றார்கள். அதற்கு நபி ﷺ அவர்கள் “பள்ளிகளை நோக்கி அதிகமான எட்டுகள் எடுத்து வைப்பது” என்று பதிலளித்தார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

## 6. நபி ﷺ மீது ஸலாம் சொல்ல வேண்டும்.

اَلسَّلَامُ عَلَى رَسُوْلِ اللّٰهِ اَللّٰهُمَّ افْتَحْ لِى اَبْوَابَ رَحْمَتِكَ

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் பள்ளிக்குள் நுழைந்தால் நபியின் மீது ஸலாம் கூறுங்கள் (அஸ்ஸலாமு அலா ரஸூலில்லாஹ்) பிறகு அல்லாஹும்மப்தஹ்லீ.. என்ற துஆவை கூறுங்கள். (ஸுனனுன் நஸாயி)

பொருள்: "அல்லாஹ்வுடைய தூதரின் மீது ஸலாம் உண்டாகட்டும். அல்லாஹ்வே! உனது கருணையின் வாசல்களை எனக்குத் திறந்திடு"

**(7) வலது காலை முன் வைத்து பள்ளிக்குள் நுழைய வேண்டும். வெளியேறும் போது இடது காலை வைத்து வெளியேற வேண்டும்.**

அனஸ் (ரழி) கூறுகிறார்கள்: நீ பள்ளிக்குள் நுழையும்போது வலது காலை வைத்துச் செல்வதும் வெளியேறும்போது இடதுகாலை வைத்து செல்வதும் ஸுன்னத்தில் (நபிவழியில்) கட்டுப்பட்டவையாகும். (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

**(8) முதல் ஸஃஃப்ஃஃபில் தொழுவதற்கு முயல வேண்டும்.**

நபி ﷺ கூறுகிறார்கள்: "அதான் சொல்வது முதல் வரிசையில் தொழுவது ஆகிய இரண்டின் நன்மைகளையும் மக்கள் அறிந்து கொண்டால் அதற்காகப் போட்டிப் போட்டுக் கொள்வார்கள். இதனால் அவர்களுக்குள் சீட்டு குலுக்கிப்போட

வேண்டிய நிலையும் வரலாம். விரைவாக முன்கூட்டியே பள்ளிக்கு வருவதின் நன்மையை மக்கள் அறிந்து கொண்டால் அதற்காக ஒருவர் மற்றவரை முந்திக் கொள்வார்கள். இஷா மற்றும் ஸுப்ஹ் தொழுகையில் உள்ள நன்மையை மக்கள் அறிந்து கொண்டால் அதற்காகக் கால்களை தேய்த்துக் (தவழ்ந்து) கொண்டாவது வந்து விடுவார்கள்." (ஸஹீஹுல் புகாரி)

**9. பள்ளியிலிருந்து வெளியேறும் போது இந்த துஆவை ஓத வேண்டும்.**

اللّٰهُمَّ اِنِى أَسْئَلُكَ مِنْ فَضْلِكَ

பொருள்: "அல்லாஹ்வே! உனது கிருபையிலிருந்து உன்னிடம் கேட்கிறேன்" (ஸஹீஹ் முஸ்லிம்)

இமாம் நஸாயிவுடைய அறிவிப்பில் "ஸலவாத்து ஓத வேண்டும்" என்றும் வந்துள்ளது.

**10. இடது காலை வைத்து வெளியேற வேண்டும்.**

(முன் கூறப்பட்ட அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கும் அறிவிப்பு இதற்கு ஆதாரமாகும். (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

## 11. இரண்டு ரக்அத்கள் “காணிக்கைத் தொழுகை” தொழுது கொள்ள வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “உங்களில் ஒருவர் பள்ளிக்குச் சென்றால் இரண்டு ரக்அத் தொழும் வரை அமர வேண்டாம்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

ஆகவே, “தஹிய்யதுல் மஸ்ஜித்” எனப்படும் தொழுகை எல்லா நேரத்திலும் தொழ வேண்டும் என்று இமாம் ஷாஃபி (ரஹ்) கூறுகிறார்கள். இதுவே ஏற்றமான சொல்லாகும்.

ஒவ்வொரு நாளும் குறைந்தது 5 முறை நாம் பள்ளிக்குச் செல்கிறோம். இந்த 11 ஸுன்னத்து களை நாம் ஒவ்வொரு முறையும் கடைப்பிடித்தால் 55 ஸுன்னத்துகளை நிறைவேற்றியவர்களாக ஆவோம்.

---------

# அதான் (பாங்கு) உடைய ஸுன்னத்துக்கள்

(1) அதான் கூறுபவர் சொல்வதைப் போன்றே அதை கேட்பவரும் சொல்ல வேண்டும். ஆனால்,

حَيَّ عَلَى الصَّلَاةِ

حَيَّ عَلَى الْفَلَاحِ

என்ற வாக்கியங்களை செவிமடுக்கும் போது மட்டும்,

لَا حَوْلَ وَلَاقُوَّةَ اِلَّابِاللّٰهِ

என்று சொல்ல வேண்டும்.

பொருள்: "பாவத்தை விட்டும் மீளமுடியாது: நன்மை செய்ய சக்தி பெற முடியாது. அல்லாஹ் வைக் கொண்டே தவிர!" (ஸஹீஹுல் புகாரி)

**அதானுக்குப் பதில் கூறுவதின் நன்மையாவது:**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “இந்த ஸுன்னத்தை கடைபிடிப்பதற்கு நிச்சயம் சொர்க்கம் உண்டு.” (ஸஹீஹ் முஸ்லிம்)

(2) அதான் சொல்பவர் தஷஹ்ஹுத் கூறியவுடன் அதைக் கேட்பவர்

أَنَا أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا اللّٰهُ، وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، وَأَشْهَدُ أَنَّ مُحَمَّدًا عَبْدُهُ وَرَسُولُهُ، رَضِيتُ بِاللّٰهِ رَبًّا، وَبِالْإِسْلَامِ دِينًا

என்று சொல்ல வேண்டும்.

பொருள்: “அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை: முஹம்மது ﷺ அல்லாஹ்வுடைய தூதர் என்று நானும் சாட்சி சொல்கிறேன். நான் அல்லாஹ்வை இறைவனாகவும், இஸ்லாமை மார்க்கமாகவும், முஹம்மது ﷺ அவர்களை

தூதராகவும் பொருந்திக் கொண்டேன்."

(ஸஹீஹ் முஸ்லிம்)

இவ்வாறு சொல்பவரின் பாவம் மன்னிக்கப்படும் என்று நபி ﷺ அவர்கள் கூறி இருக்கிறார்கள்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

**(3) அதானுக்கு முழுமையாகப் பதில் கூறிய பின்பு ஸலவாத்து சொல்ல வேண்டும்.**

ஸலவாத்தில் மிகச் சிறந்தது தொழுகையில் ஓதும் ஸலவாத்தாகும். அதைவிட முழுமையான ஸலவாத்து எதுவும் இருக்க முடியாது.

நபி ﷺ கூறினார்கள்: "அதான் சொல்வதை கேட்கும் பொழுது அவர் கூறுவதைப் போன்றே நீங்களும் கூறுங்கள். பிறகு என் மீது ஸலவாத்து கூறுங்கள். யார் என் மீது ஒருமுறை ஸலவாத்து சொல்வாரோ அல்லாஹ் அவர் மீது பத்துமுறை ஸலவாத்துச் சொல்கிறான்." (ஸஹீஹ் முஸ்லிம்)

இந்த ஸுன்னத்தின் நன்மையாவது: அல்லாஹ்

அடியான் மீது பத்துமுறை ஸலவாத்து சொல்கிறான்.

அதன் பொருளாவது: ‘அல்லாஹ் அந்த அடியானைப் பற்றி (மலக்குகளிடம்) பெருமையாக புகழ்ந்து பேசுகிறான்’ என்பதாகும்.

தொழுகையில் ஓதும் ஸலவாத்தும் அதன் பொருளும்

**اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلٰى إِبْرَاهِيْمَ وَعَلٰى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ اَللّٰهُمَّ بَارِكْ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلٰى إِبْرَاهِيْمَ وَعَلٰى آلِ إِبْرَاهِيْمَ إِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ**

“அல்லாஹ்வே... இப்ராஹீம் (அலை) அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் நீ கருணை புரிந்தது போன்று முஹம்மது ﷺ அவர்களுக்கும் அவர்களுடைய

குடும்பத்தாருக்கும் கருணை புரிந்திடு! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய். அல்லாஹ்வே... ‘இப்ராஹீம் (அலை) அவர்களுக்கும் அவர்களுடைய குபடும்பத் தாருக்கும் நீ பரகத் வழங்கியதைப் போன்று முஹம்மது ﷺ அவர்களுக்கும் அவர்களுடைய குடும்பத்தாருக்கும் பரகத் வழங்கிடு! நீயே புகழுக்குரியவனும் கண்ணியமிக்கவனும் ஆவாய்.” (ஸஹீஹுல் புகாரி)

**4. ஸலவாத்து கூறிய பின் இந்த துஆவை ஒதவேண்டும்.**

اَللّٰهُمَّ رَبَّ هٰذِهِ الدَّعْوَةِ التَّامَّةِ وَالصَّلَاةِ الْقَائِمَةِ آتِ مُحَمَّدَنِ الْوَسِيْلَةَ وَالْفَضِيْلَةَ وَابْعَثْهُ مَقَامًا مَّحْمُوْدَانِ الَّذِيْ وَعَدْتَّهُ إِنَّكَ لَا تُخْلِفُ الْمِيْعَادَ

பொருள்: “அல்லாஹ்வே! பரிபூரணமான இந்த அழைப்பு மற்றும் நிறைவேற இருக்கு

தொழுகையின் இறைவனே! முஹம்மதுக்கு வஸீலாவையும் நெருக்கத்தையும் சிறப்பையும் வழங்கு! நீ வாக்களித்த "மஹ்மூத்" என்ற ஸ்தானத்தில் அவர்களை எழுப்பு."

(ஸஹீஹுல் புகாரி)

## இந்த துஆவின் நன்மை:

இந்த துஆவைக் கூறுபவருக்கு நபியவர்களின் சிபாரிசு நிச்சயம் மறுமையில் கிடைக்கும்.

(5) மேற்கூறப்பட்ட முறைப்படி செய்ததற்குப் பின் தனக்குத் தேவையானதை அல்லாஹ்விடம் பிரார்த்திக்க வேண்டும். அல்லாஹ் அந்தப் பிரார்த்தனையை அங்கீகரிப்பான்.

நபி ﷺ கூறினார்கள்: "அதான் சொல்பவர் சொல்வதைப் போன்று நீங்களும் சொல்லுங்கள். முடித்ததற்குப் பின் துஆ கேளுங்கள். நீங்கள் கேட்பது உங்களுக்கு வழங்கப்படும்."

(ஸுனன் அபூதாவூது)

இந்த ஐந்து ஸுன்னத்துகளையும் நாம் ஒவ்வொரு நாளும் ஐந்துமுறை நிறைவேற்றும் வாய்ப்பை பெறுகிறோம். அதனால் இவை 25 ஸுன்னத்துகளாகின்றன.

---------

# இகாமத்துடைய ஸுன்னத்துகள்

மேற்கூறப்பட்ட ஐந்தில் கடைசியைத் தவிர மற்ற நான்கை இகாமத்துச் சொல்லும் போதும் கடைப்பிடிக்க வேண்டும்.

இவ்வாறு தான் ஸஊதி அரபியாவின் மேல்மட்ட ஃபத்வா குழுவின் மூத்த மார்க்க அறிஞர்கள் தீர்ப்பு கூறியுள்ளனர். ஆகவே நான்கு ஸுன்னத்துகளை ஐந்துமுறை செய்யும் போது 20 சுன்னத்துகளாகின்றன.

இகாமத்தில்,

حَيَّ عَلَى الصَّلَاةِ　　حَيَّ عَلَى الْفَلَاحِ

என்ற வாக்கியங்களைச் செவிமடுக்கும் போதும்,

لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللّٰهِ

என்றே கூற வேண்டும்.

قَدْ قَامَتِ الصَّلَاةُ

என்று சொல்லப்படும் போது அதையே திரும்ப சொல்ல வேண்டும்.

اَقَامَهَا اللّٰهُ وَاَدَامَهَا

என்று சொல்லக்கூடாது. ஏனெனில், அது சம்பந்தமாக வந்துள்ள ஹதீஸ்கள் பலவீனமானவை.

(மேல்மட்ட ஃபத்வா குழு – ஸஊதி)

---------

# ஸுத்ரா —
# தடுப்பு வைத்துத் தொழுதல்

நபி ﷺ கூறினார்கள்: “நீங்கள் தொழும் போது தடுப்பு வைத்துத் தொழுங்கல். தடுப்புக்கும் உங்களுக்குமிடையில் யாரையும் கடந்து செல்ல அனுமதிக்காதீர்கள்.” (ஸுனன் அபூதாவூத்)

தொழுகிற அனைவரும் இந்த ஸுன்னத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். ஆண்கள், பெண்கள், வீட்டில் தொழுதாலும் அல்லது பள்ளியில் தொழுதாலும் இந்த ஸுன்னத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். ஃபர்ழ் தொழுகை, நஃபில் தொழுகை என்ற எந்த பாகுபாடும் இல்லாமல் எல்லாத் தொழுகையிலும் இதைப் பேண வேண்டும்.

சில தொழுகையாளிகள் இந்த ஸுன்னத்தை கடைப்பிடிக்காமல் ஸுத்ராயின்றி தொழுவது மிக வருத்தத்திற்குரியதே!

இந்த ஸுத்ராவின் ஸுன்னத்தை ஒவ்வொரு

நாளும் பலமுறை நாம் பின்பற்றலாம். உதாரணமாக ஸுன்னத்துத் தொழுகைகள், ழுஹா தொழுகை, மஸ்ஜிது காணிக்கைத் தொழுகை, மற்ற நஃபில் தொழுகைகள் போன்றவற்றைக் கூறலாம். பெண்கள் வீட்டில் தொழும்போதும் இந்த ஸுன்னத்தைக் கடைபிடிக்க வேண்டும். ஜமாஅத்தாக தொழும்போது இமாமுக்கு மட்டும் ஸுத்ரா (தடுப்பு) இருப்பது போதுமானது.

## ஸுத்ரா குறித்த சில சட்டங்கள்

1. ஸுத்ரா என்பது தொழுபவர் தனக்கு முன் நிறுத்தும் ஒரு தடுப்பாகும். அது சுவராக இருக்கலாம் அல்லது தடியாகவோ தூணாகவோ இருக்கலாம். அதற்கு என்று மொத்தத்திலோ அகலத்திலோ இப்படித்தான் இருக்க வேண்டும் என்று குறிப்பிட்ட அளவு ஏதும் இல்லை.

(2) அதன் உயரம் குறைந்தது ஒரு ஜான் இருக்க வேண்டும்.

(3) நிற்கும் இடத்திலிருந்து ஸுத்ரா வரை

ஏறக்குறைய மூன்று முழம் மட்டும் இருக்க வேண்டும். ஸுஜூது செய்வதற்கு மட்டும் போதுமான இடைவெளி இருக்க வேண்டும்.

(4) எல்லா விதமான தொழுகையிலும் ஸுத்ராவைக் கடைபிடிக்க வேண்டும். தனியாக தொழுதாலும் கூட்டாகத் தொழுதாலும் இதைத் தவற விடக்கூடாது.

(5) இமாமுக்குள்ள ஸுத்ரா, அவருக்குப் பின்னால் தொழுபவருக்கு போதுமானது. எனவே, தேவை இருப்பின் பின்னால் தொழுபவருக்கு முன் குறுக்கே செல்லலாம். ஆனால், ஸஜ்தாவுடைய இடத்தை தவிர்த்துக் கொள்ளல் வேண்டும்.

**ஸுத்ராவின் நன்மைகள்:**

**(அ)** தொழுகையை முறிப்பவை குறுக்கே செல்வதால் தொழுகை வீணாவதிலிருந்து ஸுத்ரா பாதுகாக்கிறது.

*பெண், கழுதை, கருப்பு நாய் குறுக்கே

செல்வதால் தொழுகை வீணாகிவிடுகிறது.
(ஸஹீஹ் முஸ்லிம்)

**(ஆ)** பார்வை அங்குமிங்கும் சிதறுவதை விட்டும் தடுக்கிறது. அதாவது, தொழுபவர் ஸுத்ராவுக்குள் தனது பார்வையை கட்டுப்படுத்திக் கொள்வதால் அவரது சிந்தனை சிதறுவதை விட்டும் பாதுகாக்கப்படுகிறது. அதனால் தொழுகையில் முழு கவனம் செலுத்தி அதில் ஓதுவதைச் சிந்திக்க முடிகிறது.

**(இ)** தேவை உள்ளோர் தொழுபவருக்கு முன் ஸுத்ராவைத் தாண்டி குறுக்கே செல்வதற்கு அனுமதி இருக்கிறது.

---------

# அன்றாடம் நிறைவேற்றப்படும் நஃபில் தொழுகைகள்

## 1. முக்கிய ஸுன்னத் தொழுகைகள்.

நபி ﷺ கூறுகிறார்கள்: "ஒவ்வொரு நாளும் எந்த முஸ்லிம் அல்லாஹ்விற்காக ஃபர்ழ் அல்லாத உபரியான 12 ரக்அத்துகள் தொழுவாரோ, அவருக்கு அல்லாஹ் சொர்க்கத்தில் ஒரு வீட்டைக் கட்டித் தருகிறான்." (ஸஹீஹ் முஸ்லிம்)

அந்தத் தொழுகைகள்: ளுஹ்ருக்கு முன் நான்கு ரக்அத்துகள்; அதற்குப் பின் இரண்டு ரக் அத்துகள்; மக்ரிபுக்குப்பின் இரண்டு ரக்அத்துகள்; இஷாவிற்குப் பின் இரண்டு ரக்அத்துகள், ஃபஜ்ருக்கு முன் இரண்டு ரக்அத்துகள்.

அன்பிற்குரிய சகோதர சகோதரிகளே! சொர்க்கத்தில் ஒரு வீடு வேண்டும் என்ற ஆசை உங்களுக்கு இருக்கின்றதா? அதற்காக

நீங்கள் செய்ய வேண்டியது, ஒவ்வொரு நாளும் ஸுன்னத்தான 12 ரக்அத்துகள் தொழுவதுதான்.

## (2) ழுஹா தொழுகை

ழுஹா தொழுகை 360 தர்மங்களுக்குச் சமமாகிறது. மனிதனின் உடலில் 360 மூட்டுகள் இருக்கின்றன. அதன் ஒவ்வொரு எலும்பிற்காகவும் அல்லாஹ்விற்கு நன்றி செய்யும் பொருட்டு அன்றாடம் தர்மம் செய்ய வேண்டும். ழுஹாவின் இரண்டு ரக்அத்துகள் அதற்குப் போதுமானதாக அமையும். (ஸுனன் அபூதாவூத்)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: உங்களுடைய ஒவ்வொரு மூட்டிற்காகவும் தர்மம் செய்ய வேண்டும். இறைவனைத் தஸ்பீஹ் செய்வது தர்மமாகும்; நன்மையை எடுத்துச் சொல்வது தர்மமாகும்; தீமையை விட்டுத் தடுப்பதும் தர்மமாகும். இதற்குப் பகரமாக ழுஹாவுடைய இரண்டு ரக்அத்துகள் போதுமானதாகும்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

அபூ ஹுரைரா (ரழி) கூறுகிறார்கள்: "ஒவ்வொரு மாதமும் மூன்று நோன்புகள் வைக்க வேண்டும்; ழுஹாவுடைய இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும்; தூங்குவதற்கு முன் வித்ரு தொழ வேண்டும்" என்று எனது நேசத்திற்குரிய நண்பர் நபி ﷺ எனக்கு உபதேசித்துள்ளார்கள்.

(ஸஹீஹுல் புகாரி)

ழுஹாவுடைய நேரம் சூரியன் உதித்த பின் கால் மணி நேரம் அளவு கழிந்ததிலிருந்து ஆரம்பமாகி ளுஹ்ருடைய நேரம் வருவதற்கு கால்மணி நேரம் முன்பு வரை ஆகும். இதைத் தொழுவதற்கு மிக ஏற்ற நேரம், சூரியனின் வெப்பம் அதிகரிக்கும் போதாகும். குறைந்தது இரண்டு ரக்அத்துகள் தொழ வேண்டும். கூடுதல் 8 ரக்அத்துகளாகும்.

### 3. அஸ்ருக்கு முன் நான்கு ரக்அத்துகள்.

நபி ﷺ கூறினார்கள்: "அஸ்ருக்கு முன் நான்கு ரக்அத்துகள் தொழுபவருக்கு அல்லாஹ் அருள் பொழியட்டும்." (ஜாமிவுத் திர்மிதி)

### 4. மக்ரிபுடைய ஸுன்னத்.

நபி ﷺ கூறினார்கள்: “மக்ரிபுக்கு முன் தொழுது கொள்ளுங்கள்.” இவ்வாறு மூன்றுமுறை கூறியதற்குப் பின் “விரும்பியவர் இதைச் செய்து கொள்ளட்டும்” என்று கூறினார்கள்.

(ஸஹீஹுல் புகாரி)

### 5. இஷாவுடைய ஸுன்னத்.

இரண்டு அதான்களுக்கு இடையில் தொழுகை உண்டு என்று மூன்றுமுறை கூறிய பின், விரும்பியவர் இதைச் செய்யலாம் என்று நபி ﷺ கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

(இரண்டு அதான்கள் என்றால், அதானும் இகாமத்தும் ஆகும்)

---------

# இரவுத் தொழுகையின் ஸுன்னத்துகள்

நபி ﷺ கூறினார்கள்: "ரமழானுக்கு அடுத்து, நோன்புகளில் மிகச் சிறந்த அல்லாஹ்வின் மாதம் (என்று அழைக்கப்படும்) முஹர்ரமாகும். கடமையான தொழுகைக்கு பிறகு தொழுகையில் மிகச் சிறந்தது இரவு தொழுகையாகும்."

## 1. இரவுத் தொழுகையில் மிகச் சிறந்தது

இரவுத் தொழுகையில் மிகச் சிறந்தது 11 அல்லது 13 ரக்அத்துகள் நீண்ட நிலையுடன்[2] தொழுவதாகும்.

நபி ﷺ இரவில் 11 ரக்அத்துகள் தொழுவார்கள்.
(ஸஹீஹுல் புகாரி)

நபி ﷺ இரவில் 13 ரக்அத்துகள் தொழுவார்கள்.
(ஸஹீஹுல் புகாரி)

---

2. நீண்ட நிலை என்றால் அதிக நேரம் நிலையில் நின்று குர்ஆன், தஸ்பீஹ் மற்றும் திக்ருகள் ஓதி தொழுவதாகும்.

## 2. இரவில் எழுந்தவுடன் ஸிவாக் - பல் துலக்க வேண்டும்.

பிறகு இந்த வசனங்களை ஓத வேண்டும்.

إِنَّ فِي خَلْقِ السَّمَاوَاتِ وَالْأَرْضِ وَاخْتِلَافِ اللَّيْلِ وَالنَّهَارِ لَآيَاتٍ لِأُولِي الْأَلْبَابِ (190) الَّذِينَ يَذْكُرُونَ اللَّهَ قِيَامًا وَقُعُودًا وَعَلَى جُنُوبِهِمْ وَيَتَفَكَّرُونَ فِي خَلْقِ السَّمَاوَاتِ وَالْأَرْضِ رَبَّنَا مَا خَلَقْتَ هٰذَا بَاطِلًا سُبْحَانَكَ فَقِنَا عَذَابَ النَّارِ (191) رَبَّنَا إِنَّكَ مَنْ تُدْخِلِ النَّارَ فَقَدْ أَخْزَيْتَهُ وَمَا لِلظَّالِمِينَ مِنْ أَنْصَارٍ (192) رَبَّنَا إِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُنَادِي لِلْإِيمَانِ أَنْ آمِنُوا بِرَبِّكُمْ فَآمَنَّا رَبَّنَا فَاغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّئَاتِنَا وَتَوَفَّنَا مَعَ الْأَبْرَارِ (193) رَبَّنَا وَآتِنَا مَا وَعَدْتَنَا عَلَى رُسُلِكَ

وَلَا تُخْزِنَا يَوْمَ الْقِيَامَةِ إِنَّكَ لا تُخْلِفُ الْمِيعَادَ (194)
فَاسْتَجَابَ لَهُمْ رَبُّهُمْ أَنِّي لَا أُضِيعُ عَمَلَ عَامِلٍ مِنْكُمْ
مِنْ ذَكَرٍ أَوْ أُنْثَى بَعْضُكُمْ مِنْ بَعْضٍ فَالَّذِينَ هَاجَرُوا
وَأُخْرِجُوا مِنْ دِيَارِهِمْ وَأُوذُوا فِي سَبِيلِي وَقَاتَلُوا وَقُتِلُوا
لَأُكَفِّرَنَّ عَنْهُمْ سَيِّئَاتِهِمْ وَلَأُدْخِلَنَّهُمْ جَنَّاتٍ تَجْرِي مِنْ
تَحْتِهَا الْأَنْهَارُ ثَوَابًا مِنْ عِنْدِ اللَّهِ وَاللَّهُ عِنْدَهُ حُسْنُ
الثَّوَابِ (195) لَا يَغُرَّنَّكَ تَقَلُّبُ الَّذِينَ كَفَرُوا فِي
الْبِلَادِ (196) مَتَاعٌ قَلِيلٌ ثُمَّ مَأْوَاهُمْ جَهَنَّمُ وَبِئْسَ
الْمِهَادُ (197) لَكِنِ الَّذِينَ اتَّقَوْا رَبَّهُمْ لَهُمْ جَنَّاتٌ
تَجْرِي مِنْ تَحْتِهَا الْأَنْهَارُ خَالِدِينَ فِيهَا نُزُلًا مِنْ عِنْدِ
اللَّهِ وَمَا عِنْدَ اللَّهِ خَيْرٌ لِلْأَبْرَارِ (198) وَإِنَّ مِنْ أَهْلِ
الْكِتَابِ لَمَنْ يُؤْمِنُ بِاللَّهِ وَمَا أُنْزِلَ إِلَيْكُمْ وَمَا أُنْزِلَ

إِلَيْهِمْ خَاشِعِينَ لِلّٰهِ لَا يَشْتَرُونَ بِآيَاتِ اللّٰهِ ثَمَنًا قَلِيلًا أُولَئِكَ لَهُمْ أَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ إِنَّ اللّٰهَ سَرِيعُ الْحِسَابِ (199) يَاأَيُّهَا الَّذِينَ آمَنُوا اصْبِرُوا وَصَابِرُوا وَرَابِطُوا وَاتَّقُوا اللّٰهَ لَعَلَّكُمْ تُفْلِحُونَ (200)

(ஆலுஇம்ரான் 3 : 190 - 200)

பிறகு அடுத்து வரும் துஆவை ஒத வேண்டும்.

اَللّٰهُمَّ رَبَّنَا لَكَ الحَمْدُ أَنْتَ قَيِّمُ السَّمَوَاتِ وَالأَرْضِ، وَلَكَ الحَمْدُ أَنْتَ رَبُّ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ، وَلَكَ الحَمْدُ أَنْتَ نُورُ السَّمَوَاتِ وَالأَرْضِ وَمَنْ فِيهِنَّ، أَنْتَ الحَقُّ، وَقَوْلُكَ الحَقُّ، وَوَعْدُكَ الحَقُّ، وَلِقَاؤُكَ الحَقُّ، وَالجَنَّةُ حَقٌّ، وَالنَّارُ حَقٌّ، وَالسَّاعَةُ حَقٌّ، اَللّٰهُمَّ لَكَ أَسْلَمْتُ، وَبِكَ آمَنْتُ، وَعَلَيْكَ تَوَكَّلْتُ، وَإِلَيْكَ

خَاصَمْتُ، وَبِكَ حَاكَمْتُ، فَاغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ، وَأَسْرَرْتُ وَأَعْلَنْتُ، وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، لاَ إِلٰهَ إِلَّا أَنْتَ

பொருள்: "அல்லாஹ்வே! உனக்கே புகழ் அனைத்தும்; நீயே வானங்களையும் பூமியையும் அவற்றில் உள்ளவர்களையும் நிர்வகிப்பவன்; உனக்கே எல்லாப் புகழும்; நீயே வானங்கள், பூமி மற்றும் அவற்றில் உள்ளவர்களின் பிரகாசமாக இருக்கின்றாய். உனக்கே எல்லாப் புகழும்; நீயே உண்மையானவன்; உனது வாக்கும் உண்மையானதே; உனது சந்திப்பும் உண்மையானதே; உனது சொல்லும் உண்மையானதே: சொர்க்கம் உண்மையானதே: நரகம் உண்மையானதே; இறைத் தூதர்கள் உண்மையானவர்களே; முஹம்மது உண்மையானவரே; மறுமை உண்மையானதே; அல்லாஹ்வே! உனக்கே அடிபணிந்தேன்;

உன்னைக் கொண்டு நம்பிக்கை கொண்டேன்; உன் மீதே பொறுப்பு சாட்டினேன்; உன் பக்கமே திரும்பினேன்; உன்னைக் கொண்டே வாதிட்டேன்; உன்னிடமே தீர்ப்புக்கு வந்தேன்; நான் முன்பு செய்த, பின்பு செய்த, இரகசியமாகச் செய்த, பகிரங்கமாகச் செய்த, அனைத்துப் பாவங்களையும் மன்னித்து விடு! நீயே முற்படுத்துபவன்; நீயே பிற்படுத்துபவன்; உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் அறவே இல்லை."

(ஸஹீஹுல் புகாரி)

## (4) இரவுத் தொழுகையை ஆரம்பிக்கும்போது

இரவுத் தொழுகையை ஆரம்பிக்கும்போது முதலில் சுருக்கமாக இரண்டு ரக்அத்கள் தொழ வேண்டும். இதன் மூலம் அடுத்து நீண்ட ரக்அத்துகள் தொழுவதற்கு உற்சாகம் பிறக்கிறது.

நபி ﷺ கூறினார்கள்: "உங்களில் ஒருவர் இரவில் எழுந்தால் முதலில் சுருக்கமாக இரண்டு

ரக்அத்கள் தொழுது கொள்ளட்டும்.”

(ஸஹீஹ் முஸ்லிம்)

இரவுத் தொழுகையின் ஆரம்பத்தில் இந்த துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ رَبَّ جِبْرَائِيْلَ وَمِيْكَائِيْلَ وَإِسْرَافِيْلَ فَاطِرَ السَّمٰوَاتِ وَالْأَرْضِ عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ أَنْتَ تَحْكُمُ بَيْنَ عِبَادِكَ فِيْمَا كَانُوْا فِيْهِ يَخْتَلِفُوْنَ. اِهْدِنِيْ لِمَا اخْتُلِفَ فِيْهِ مِنَ الْحَقِّ بِإِذْنِكَ إِنَّكَ تَهْدِيْ مَنْ تَشَاءُ إِلىٰ صِرَاطٍ مُّسْتَقِيْمٍ

பொருள்: அல்லாஹ்வே! ஜிப்ரீல், மீக்காயில், இஸ்ராஃபீலுடைய இறைவனே! வானங்கள், பூமியைப் படைத்தவனே! மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிந்தவனே! உனது அடியார்கள் கருத்து வேற்றுமை கொண்டவற்றில்

அவர்களுக்கிடையே நீயே தீர்ப்பளிப்பாய்! கருத்து வேற்றுமை கொள்ளப்பட்ட உண்மைக்கு, உனது நாட்டத்தைக் கொண்டு எனக்கு வழிகாட்டு! நிச்சயமாக நீ நாடியவரை நேரான வழியில் செலுத்துகின்றாய்."(ஸஹீஹ் முஸ்லிம்)

## (6) இரவுத் தொழுகையை நீட்டித் தொழ வேண்டும்.

"தொழுகையில் மிகச் சிறந்தது எது என்று கேட்கப்பட்டதற்கு நீண்ட ரக்அத் உடையவை" என்று நபி ﷺ அவர்கள் பதில் கூறினார்கள்."
(ஸஹீஹ் முஸ்லிம்)

## (7) குர்ஆன் ஓதும் போது,

குர்ஆன் ஓதும்போது, வேதனையைக் குறித்து கூறப்பட்டுள்ள வசனங்கள் வந்தால் அல்லாஹ் விடம் பாதுகாப்புக் கேட்க வேண்டும்.

"அல்லாஹ்விடம் அல்லாஹ்வின் வேதனையை விட்டு பாதுகாப்புத் தேடுகிறேன்."

கருணை, நற்பாக்கியம் குறித்து கூறப்பட்டுள்ள வசனங்கள் வரும்போது அவற்றை அல்லாஹ் விடம் கேட்கவேண்டும்.

“அல்லாஹ்வே! உன்னிடமே உனது கிருபையை கேட்கிறேன்.”

அல்லாஹ்வை தஸ்பீஹ் செய்ய வேண்டும் என்ற பொருள் உள்ள வசனங்கள் வரும்போது தஸ்பீஹ் செய்ய வேண்டும்.

“நபி ﷺ அவர்கள் நிதானமாக ஓதுவார்கள். தஸ்பீஹ் குறித்த வசனங்கள் வந்தால் தஸ்பீஹ் செய்வார்கள். அல்லாஹ்வின் அருளை ஆதரவு வைக்கிற வசனங்கள் வந்தால் அவனது அருளை வேண்டுவார்கள். வேதனையை விட்டு பாதுகாப்புத் தேடவேண்டிய வசனங்கள் வந்தால் பாதுகாப்பு தேடுவார்கள்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

## இரவில் எழுந்து தொழுவதற்கு உதவுபவை

1. அல்லாஹ்விடம் அதற்காக துஆச் செய்ய வேண்டும்.
2. இரவில் தாமதமாக தூங்குவதை தவிர்க்க வேண்டும்.
3. பகலில் “கைலூலா” (சிறிது நேரம்) தூங்க வேண்டும்.
4. பாவங்களை தவிர்க்க வேண்டும்.
5. அதற்கான முயற்சி எடுக்க வேண்டும்.

---------

# வித்ருடைய ஸுன்னத்துகள்

(1) மூன்று ரக்அத்துகள் வித்ரு தொழுபவர்கள் முதல் ரக்அத்தில் ஸூரா அல் ஃபாத்திஹாவும் பிறகு ஸூரத்துல் அஃலாவும் ஓத வேண்டும்.

بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

سَبِّحِ اسْمَ رَبِّكَ الْأَعْلَى (1) الَّذِي خَلَقَ فَسَوَّى (2) وَالَّذِي قَدَّرَ فَهَدَى (3) وَالَّذِي أَخْرَجَ الْمَرْعَى (4) فَجَعَلَهُ غُثَاءً أَحْوَى (5) سَنُقْرِئُكَ فَلَا تَنْسَى (6) إِلَّا مَا شَاءَ اللَّهُ إِنَّهُ يَعْلَمُ الْجَهْرَ وَمَا يَخْفَى (7) وَنُيَسِّرُكَ لِلْيُسْرَى (8) فَذَكِّرْ إِنْ نَفَعَتِ الذِّكْرَى (9) سَيَذَّكَّرُ مَنْ يَخْشَى (10) وَيَتَجَنَّبُهَا الْأَشْقَى (11) الَّذِي يَصْلَى النَّارَ الْكُبْرَى (12) ثُمَّ لَا يَمُوتُ فِيهَا وَلَا يَحْيَى (13)

قَدْ أَفْلَحَ مَنْ تَزَكَّى (14) وَذَكَرَ اسْمَ رَبِّهِ فَصَلَّى (15) بَلْ تُؤْثِرُونَ الْحَيَاةَ الدُّنْيَا (16) وَالْآخِرَةُ خَيْرٌ وَأَبْقَى (17) إِنَّ هَذَا لَفِي الصُّحُفِ الْأُولَى (18) صُحُفِ إِبْرَاهِيمَ وَمُوسَى (19)

பிறகு, இரண்டாவது ரக்அத்தில் ஸூரா ஃபாதிஹாவிற்குப் பின்னர் ஸூரா அல்காஃபிரூன் ஓத வேண்டும்.

بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

قُلْ يَاأَيُّهَا الْكَافِرُونَ (1) لَا أَعْبُدُ مَا تَعْبُدُونَ (2) وَلَا أَنْتُمْ عَابِدُونَ مَا أَعْبُدُ (3) وَلَا أَنَا عَابِدٌ مَا عَبَدْتُمْ (4) وَلَا أَنْتُمْ عَابِدُونَ مَا أَعْبُدُ (5) لَكُمْ دِينُكُمْ وَلِيَ دِينِ (6)

மூன்றாவது ரக்அத்தில் ஸூரா ஃபாதிஹாவிற்குப் பின்னர் ஸூரா அல் இக்லாஸ் ஓத வேண்டும். (ஸுனன் அபூதாவூது)

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ هُوَ اللّٰهُ أَحَدٌ (1) اللّٰهُ الصَّمَدُ (2) لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ (3) وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ (4)

(2) வித்ர் தொழுகையை முடித்தவுடன்,

سُبْحَانَ مَلِكِ الْقُدُّوْسِ

என்று மூன்றுமுறை ஓத வேண்டும். பொருள்: "மிகத் தூய்மைமிக்க அரசனான அல்லாஹ்வைப் பரிசுத்தப்படுத்துகிறேன்."

சில அறிவிப்புகளில்,

رَبِّ الْمَلٰئِكَةِ وَالرُّوْح

“மலக்குகள் மற்றும் ரூஹுடைய இறைவன்” என்பதையும் சேர்த்து ஓத வேண்டும் என வந்துள்ளது. (ஸுனன் அபூதாவூது)

---------

# ஃபஜ்ருடைய ஸுன்னத்

(1) ஃபஜ்ருடைய இரண்டு ரக்அத் ஸுன்னத்தைச் சுருக்கமாக தொழவேண்டும்.

நபி ﷺ அவர்கள் ஃபஜ்ருடைய ஸுன்னத் இரண்டு ரக்அத்களை ஸுப்ஹு தொழுகையின் பாங்கிற்கும் இகாமத்திற்கும் இடையில் சுருக்கமாகத் தொழுவார்கள். (ஸஹீஹுல் புகாரி)

(2) முதல் ரக்அத்தில் (அல்பகரா 2:136) வது வசனத்தை நபி ﷺ அவர்கள் ஓதுவார்கள்.

**قُولُوا آمَنَّا بِاللّٰهِ وَمَا أُنْزِلَ إِلَيْنَا وَمَا أُنْزِلَ إِلَى إِبْرَاهِيمَ وَإِسْمَاعِيلَ وَإِسْحَاقَ وَيَعْقُوبَ وَالْأَسْبَاطِ وَمَا أُوتِيَ مُوسَى وَعِيسَى وَمَا أُوتِيَ النَّبِيُّونَ مِنْ رَبِّهِمْ لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِنْهُمْ وَنَحْنُ لَهُ مُسْلِمُونَ (136)**

இரண்டாவது ரக்அத்தில் (ஆலுஇம்ரான் 3:52) வது வசனத்தை ஓதுவார்கள்.

فَلَمَّا أَحَسَّ عِيسَى مِنْهُمُ الْكُفْرَ قَالَ مَنْ أَنْصَارِي إِلَى اللَّهِ قَالَ الْحَوَارِيُّونَ نَحْنُ أَنْصَارُ اللَّهِ آمَنَّا بِاللَّهِ وَاشْهَدْ بِأَنَّا مُسْلِمُونَ (52)

அல்லது (3:64) ஆலுஇம்ரான் வசனத்தை ஓதுவார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

قُلْ يَاأَهْلَ الْكِتَابِ تَعَالَوْا إِلَى كَلِمَةٍ سَوَاءٍ بَيْنَنَا وَبَيْنَكُمْ أَلَّا نَعْبُدَ إِلَّا اللَّهَ وَلَا نُشْرِكَ بِهِ شَيْئًا وَلَا يَتَّخِذَ بَعْضُنَا بَعْضًا أَرْبَابًا مِنْ دُونِ اللَّهِ فَإِنْ تَوَلَّوْا فَقُولُوا اشْهَدُوا بِأَنَّا مُسْلِمُونَ (64)

மற்றும் சில அறிவிப்பில் “முதல் ரக்அத்தில் ஸூரா அல்காஃபிரூனையும் இரண்டாவது ரக்அத்தில்,

ஸூரா அல் இக்லாஸையும் ஓதுவார்கள்” என்று வந்துள்ளது. (ஸஹீஹ் முஸ்லிம்)

(3) வீட்டில் ஸுன்னத் தொழுது பிறகு சிறிது நேரம் வலது பக்கம் சாய்ந்து படுக்க வேண்டும். சில வினாடிகளாவது படுப்பதால் ஸுன்னத்தை நிறைவேற்றிய பலன் கிடைக்கிறது.

நபி ﷺ ஃபஜ்ருடைய (ஸுன்னத்) இரண்டு ரக்அத் தொழுத பிறகு வலது பக்கம் சாய்ந்து (சிறிது நேரம்) படுத்துக் கொள்வார்கள்.
(ஸஹீஹுல் புகாரி)

## ஃபஜ்ர் தொழுகைக்குப் பின் அமர்வது

(1) நபி ﷺ அவர்கள் ஃபஜ்ர், தொழுத பின் அதே இடத்தில் சூரியன் நன்கு உதயமாகும் வரை அமர்ந்து இருப்பார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

நபி ﷺ கூறினார்கள்: தொழுகைக்கு முன்போ பின்போ பள்ளியில் அமர்ந்து இருப்பவர்களுக்காக வானவர்கள் பிழை பொறுப்புத் தேடுகிறார்கள்.

اَللّٰهُمَّ اغْفِرْلَهُ اَللّٰهُمَّ ارْحَمْهُ

‘அல்லாஹ்வே... இவரை மன்னித்துவிடு! அல்லாஹ்வே... இவருக்குக் கருணை காட்டு!’ என்று மலக்குகள் பிரார்த்திக்கிறார்கள்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

அல்லாஹ்வுக்குக் கீழ்ப்படிந்தால் அவன் நமக்கு வழங்கும் கண்ணியத்தைப் பாருங்கள். அவனது நெருக்கத்திற்குரிய வானவர்களை நமக்காக துஆ கேட்பதில் ஈடுபடுத்தி விடுகிறான்.

---------

# தொழுகையின் சொல் ரீதியான ஸுன்னத்துகள்

(1) ‘அல்லாஹு அக்பர்’ என்று தக்பீர் கூறியவுடன், இந்த துஆவை ஓத வேண்டும்.

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ
وَتَعَالٰى جَدُّكَ وَلَا إِلٰهَ غَيْرُكَ

பொருள்: “அல்லாஹ்வே! உன்னைப் புகழ்ந்து பரிசுத்தப்படுத்துகிறோம்; உனது பெயர் அருள் வளம் பெற்றது; உனது மகிமை மிக உயர்ந்தது; உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை.” (ஸுனன் அபூதாவூத்)

அல்லது இந்த துஆவை ஓதலாம்.

اَللّٰهُمَّ بَاعِدْ بَيْنِيْ وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَّ بَيْنَ
الْمَشْرِقِ وَالْمَغْرِبِ اَللّٰهُمَّ نَقِّنِيْ مِنْ خَطَايَايَ كَمَا

يُنَقَّى الثَّوْبُ الْأَبْيَضُ مِنَ الدَّنَسِ اَللّٰهُمَّ اغْسِلْنِيْ مِنْ خَطَايَايَ بِالثَّلْجِ وَالْمَاءِ وَالْبَرَدِ

பொருள்: ‘அல்லாஹ்வே! கிழக்குக்கும் மேற்கிற்கு மிடையே நீ ஏற்படுத்திய தூரத்தைப் போல் எனக்கும் எனது தவறுகளுக்கும் இடையே நீ தூரத்தை ஏற்படுத்து அல்லாஹ்வே! வெண்மையான ஆடை அழுக்கை விட்டு தூய்மையாக்கப்படுவது போல் தவறுகளை விட்டு என்னை நீ தூய்மையாக்கு! தண்ணீராலும் பனிக்கட்டியாலும் ஆலங்கட்டியாலும் என் தவறுகளை நீ கழுகிவிடு!’ (ஸஹீஹுல் புகாரி)

இன்னும் பல துஆக்கள் உள்ளன. அவற்றைக் கற்று ஓதி வரவும்.

2. குர்ஆன் ஓதுவதற்கு முன்...

أَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطَانِ الرَّجِيْم

ஓத வேண்டும்.

பொருள்: “விரட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடுகிறேன்.”

3. பிறகு...

بِسْمِ اللّٰهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

ஓத வேண்டும். பொருள்: அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...

4. ஸூரா ஃபாத்திஹாவிற்கு பின்...

آمِين

பொருள்: “ஏற்றுக் கொள்!”

ஆமீன் கூற வேண்டும்.

(5) தனியாக தொழும்போது ஃபஜ்ர், ஜுமுஆ ஆகியவற்றின் இரண்டு ரக்அத்துகளிலும் மக்ரிப், இஷா ஆகியவற்றின் முதல் இரண்டு ரக்அத்துகளிலும் ஏனைய நஃபில்

தொழுகைகளுடைய அனைத்து ரக்அத்துகளிலும் துணை ஸூரா ஓதுவது ஸுன்னத்தாகும்.

இமாமுடன் தொழும்போது சப்தமின்றி ஓதப்படும் தொழுகைகளில் மட்டும் துணை ஸூரா ஓத வேண்டும். இமாம் சப்தமாக ஓதுகிற நேரத்தில் துணை ஸூரா ஓதக்கூடாது. (ஆனால், ஃபாத்திஹா ஸூரா மட்டும் எப்போதும் ஓதியே ஆக வேண்டும்.)

6. ருகூவிலிருந்து எழுந்த பிறகு...

رَبَّنَا وَلَكَ الْحَمْدُ

இந்த துஆவை ஓதுவது ஸுன்னத்தாகும்.

பொருள் : "எங்கள் இறைவா! உனக்கே எல்லாப் புகழும்." அத்துடன் இந்த துஆவையும் ஓத வேண்டும்.

مِلْءَ السَّمٰوَاتِ وَمِلْءَ الْأَرْضِ وَمَا بَيْنَهُمَا وَمِلْءَ مَا

شِئْتَ مِنْ شَيْءٍ بَعْدُ، أَهلَ الثَّنَاءِ وَالْمَجْدِ أَحَقُّ مَا قَالَ الْعَبْدُ وَكُلُّنَا لَكَ عَبْدٌ. اَللّٰهُمَّ لَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلَا يَنْفَعُ ذَا الْجَدِّ مِنْكَ الْجَدُّ

பொருள்: வோனங்கள் நிரம்ப, பூமி நிறம்ப அவ்விரண்டுக்கும் இடையில் உள்ளவை நிரம்ப, அதற்குப் பின் நீ நாடியது நிரம்ப உனக்குப் புகழ் உண்டாகட்டும்! நீ புகழுக்குரியவன்; கண்ணியத்திற்குரியவன். நீயே அடியார்களின் (நல்ல) பேச்சுக்கு மிக உரிமையானவன். நாங்கள் அனைவரும் உனது அடிமைகளே! அல்லாஹ்வே! நீ கொடுப்பதைத் தடுப்பவர் யாரும் இல்லை; நீ தடுத்ததைக் கொடுப்பவர் யாரும் இல்லை. எந்தச் செல்வந்தனின் செல்வமும் உன்னை விட்டு அவனுக்கு எந்தப் பலனையும் அளிக்க முடியாது. (ஸஹீஹ் முஸ்லிம்)

(7) ருகூவிலும் ஸுஜூதிலும் சொல்ல வேண்டிய தஸ்பீஹை பலமுறை ஓதுவது.

(8) இரண்டு ஸுஜூதுக்கும் இடையில், இந்த துஆவைப் பலமுறை ஓத வேண்டும்.

رَبِّ اغْفِرْ لِيْ رَبِّ اغْفِرْ لِيْ

“என் இறைவனே! என்னை மன்னித்துவிடு!”

(9) கடைசி இருப்பில் இந்த துஆவை ஓத வேண்டும்.

اَللّٰهُمَّ إِنِّـيْ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ وَمِنْ عَذَابِ جَهَنَّمَ وَمِنْ فِتْنَةِ الْمَحْيَا وَالْمَمَاتِ وَمِنْ شَرِّ فِتْنَةِ الْمَسِيْحِ الدَّجَّالِ

“அல்லாஹ்வே! நரக வேதனையை விட்டும் கப்ருடைய வேதனையை விட்டும் வாழ்வு மற்றும் மரணத்தின் குழப்பத்தை விட்டும் மஸீஹ் குழப்பத்தை விட்டும் மஸீஹ் தஜ்ஜாலின் குழப்பத்தை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்.” (ஸஹீஹுல் புகாரி)

ஸுஜூதில் இருக்கும்போது தஸ்பீஹ் செய்வதுடன், தான் விரும்பிய பிரார்த்தனைகளையும் அல்லாஹ்விடம் கேட்க வேண்டும்.

நபி ﷺ கூறுகிறார்கள்: “அடியான் ஸஜ்தாவில் இருக்கும்போது தனது இறைவனுக்கு மிக அருகாமையில் இருக்கின்றான். ஆகவே, ஸுஜூதில் இருக்கும் போது அதிகமாக துஆ கேளுங்கள்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

ஸுஜூது மற்றும் பல நிலைகளில் ஓதுவதற்கு உள்ள துஆக்களை அறிவதற்கு ‘ஹிஸ்னுல் முஸ்லிம்’ என்ற நூல் உதவியாக இருக்கும்.

துஆவுல் இஸ்திஃப்தாஹ் (தக்பீர் கட்டிய உடன் ஓதும் துஆ) மற்றும் தஷஹ்ஹுதிற்கு பிறகு ஓதும் துஆவைத் தவிர மற்ற அனைத்தையும் ஒவ்வொரு ரக்அத்திலும் ஓத வேண்டும்.

ஃபர்ழான தொழுகைகளில் மேற்கூறப்பட்ட ஸுன்னத்துகளை நாம் நிறைவேற்றும் போது ஒவ்வொரு நாளும் 136 ஸுன்னத்துகளை நிறைவேற்றியவர்களாய் ஆகின்றோம்.

நஃபிலுடைய 25 ரக்அத்துகளில் இந்த ஸுன்னத்தை நிறைவேற்றும் போது ஒவ்வொரு நாளும் 175 ஸுன்னத்துகளை நிறைவேற்றியவர்களாய் ஆகின்றோம். நஃபில் தொழுகைகளை நாம் கூடுதலாக நிறைவேற்றும் போது இந்த ஸுன்னத்துகளின் எண்ணிக்கையும் கூடுகிறது.

ஒருமுறை மட்டும் கூறப்படும் துஆவுல் இஸ்திஃப்தாஹ் மற்றும் தஷஹ்ஹுதுக்குப் பின் ஓதும் துஆ ஆகிய இரண்டை ஃபர்ழ் தொழுகையில் கணக்கெடுத்தால் 10 ஸுன்னத்து களாகின்றன. நஃபில் தொழுகையில் கணக் கெடுத்தால் 24 ஸுன்னத்துகள் ஆகின்றன. ஆனால், நஃபில் தொழுகைகளை அதிகப்படுத்தும் போது இந்த ஸுன்னத்துகளின் எண்ணிக்கையும் கூடுகிறது. எனவே நன்மைகளும் அதிகமாக கிடைக்கின்றன.

---------

# செயல் ரீதியான ஸுன்னத்துகள்

(1) முதல் தக்பீர் சொல்லும்போது கைகளை உயர்த்துவது.

(2) ருகூவிற்குச் செல்லும்போது கைகளை உயர்த்துவது.

(3) ருகூவிலிருந்து எழும்போது கைகளை உயர்த்துவது.

(4) மூன்றாவது ரக்அத்திற்கு எழும்போது கைகளை உயர்த்துவது.

(5) கைகளை உயர்த்தும்போதும் இறக்கும்போதும் விரல்களை ஒன்றோடு ஒன்று சேர்த்து வைத்திருப்பது.

(6) விரல்களை மடக்காமல் நீட்டி வைத்து, உள்ளங்கை கிப்லாவை நோக்கியதாக விரிக்கப்பட்டிருப்பது.

(7) கைகளை தோள்பட்டை வரை அல்லது காதுகளின் சோணை வரை உயர்த்துவது.

(8) வலது கையை இடது கையின் மீது வைப்பது அல்லது வலது கையைக் கொண்டு இடது கையின் மணிக்கட்டை பிடித்திருப்பது.

(9) ஸுஜூதுடைய இடத்தில் பார்வை இருப்பது.

(10) கால்களை ஒட்டி வைத்து நிற்காமல் சற்று பிரித்து வைத்திருப்பது.

(11) குர்ஆனை முறையாகவும் சிந்தனையுடனும் ஓதுவது.

---------

# ருகூவுடைய ஸுன்னத்துகள்

(1) விரல்களை விரித்து வைத்து இரு கைகளைக் கொண்டு முட்டிக்கால்களை பிடித்துக் கொள்வது.

(2) முதுகு சமமாக இருப்பது.

(3) முதுகுக்குச் சமமாக தலை இருப்பது: தலையைத் தாழ்த்தவோ உயர்த்தவோ கூடாது.

(4) குடங்கைகளை விலாவை விட்டும் சற்று தூரமாக வைத்திருப்பது.

---------

# ஸுஜூதுடைய ஸுன்னத்துகள்

1. குடங்கைகளை விலாவிலிருந்து அகற்றி வைத்திருப்பது.

2. வயிற்றைத் தொடையிலிருந்து அகற்றி வைப்பது.

3. தொடையைக் கெண்டைக்காலிலிருந்து அகற்றி வைப்பது.

4. முட்டிக் கால்களை பிரித்து வைத்திருப்பது.

5. பாதங்களை நிறுத்தி வைப்பது.

6. விரல்களின் உள் பக்கத்தை பூமியில் பதிய வைப்பது.

7. பாதங்களை வளைக்காமல், படுக்க வைக்காமல் பூமியில் ஊன்றி நிறுத்தி நேராக வைத்திருப்பது.

8. கரங்களை புஜத்திற்கு நேராக அல்லது காதுக்கு நேராக வைத்திருப்பது.

9. கைகளை விரித்து வைத்திருப்பது.

10. விரல்களை ஒன்றோடு ஒன்று சேர்த்து வைத்திருப்பது.

11. விரல்களைக் கிப்லாவை முன்னோக்கி வைத்திருப்பது.

---------

# இரண்டு ஸஜ்தாவிற்கு இடையில் உள்ள ஸுன்னத்துகள்

இரண்டு ஸஜ்தாவுக்கு இடையில் உட்காருவதற்கு இரண்டு அமைப்புகள் உள்ளன.

(1) இரண்டு பாதங்களையும் நிற்க வைத்து குதிங்கால்கள் மீது உட்காருவது. இதற்கு 'இக்ஆ' என்று கூறப்படும்.

(2) வலது பாதத்தை நிற்க வைத்து, இடது பாதத்தை பூமியில் விரித்து வைத்து, அதன் மீது உட்காருவது. இதற்கு 'இஃப்திராஷ்' என்று சொல்லப்படும். (முதல் அத்தஹிய்யாத் இருப்பில் இப்படித்தான் உட்கார வேண்டும்.)

இரண்டு ஸஜ்தாவிற்கு இடையில் நபி ﷺ நீண்ட நேரம் உட்காருவார்கள். அதனால் சிலர் நபி ﷺ அவர்கள் மறந்துவிட்டார்களோ என்று எண்ணுவர்.

முதல் ரக்அத் மற்றும் மூன்றாவது ரக்அத்தில் இரண்டு ஸஜ்தா செய்த பின்பு எழுந்து நிலைக்கு வருவதற்கு முன்னதாக நபி ﷺ அவர்கள் சற்று அமர்ந்து எழுவார்கள். இந்த இருப்புக்கு 'இஸ்திராஹா' என்று சொல்லப்படும் இதில் எந்த திக்ரும் இல்லை. இந்த இஸ்திராஹா இருப்பு ஸுன்னத்தாகும்.

---------

# கடைசி தஷஹ்ஹுதின் ஸுன்னத்துகள்

கடைசி தஷஹ்ஹுதில் அமர்வதற்கு மூன்று முறைகள் உள்ளன.

(அ) வலது பாதத்தை நிற்க வைத்து, இடது காலை, வலது கெண்டைக் காலுக்குக் கீழ் வைத்து தரையின் மீது உட்காருவது.

(ஆ) வலது பாதத்தை நிறுத்தி வைக்காமல் இடது பாதம் இருக்கும் திசையிலே படுக்க வைத்து தரையின் மீது உட்காருவது.

(இ) வலது காலை நிறுத்தி வைத்து இடது காலை வலது காலின் கெண்டைக் காலுக்கும் தொடைக்கும் மத்தியில் நுழைத்து வைப்பது.

இம்மூன்றில் ஒரு முறையில் அமர்ந்து கொள்ளலாம்.

(1) இரண்டு கைகளையும் தொடையின் மீது வைக்க வேண்டும். அதாவது, வலது கையை வலது தொடையின் மீதும் இடது கையை இடது தொடையின் மீதும் விரல்களை நீட்டியும் ஒன்றோடு ஒன்று சேர்த்தும் வைப்பது.

(2) தஷஹ்ஹுது அமர்ந்தவுடன் கலிமா விரலை (ஆட்காட்டி விரலை) நீட்டுவது. இவ்வாறு இறுதிவரை நீட்டி வைத்திருப்பது. அதாவது, கட்டை விரலை நடு விரலுடன் சேர்த்து வளையத்தைப் போன்று வைத்துக் கொண்டு கலிமா விரலை நீட்டி வைத்திருக்க வேண்டும். பார்வை கலிமா விரலை நோக்கி இருக்க வேண்டும்.

(3) இரு ஸலாம் சொல்லும் போது வலது, இடது பக்கம் திரும்ப வேண்டும்.

ஆக, இங்கு செயல் ரீதியான 25 ஸுன்னத்துகள் ஒவ்வொரு ரக்அத்திலும் திரும்பத் திரும்ப வரக்கூடியவை. இவை ஃபர்ழ் தொழுகைகளில்

மட்டும் மொத்தம் 425 ஸுன்னத்துகளாகிவிடும். அடுத்து, நஃபில் தொழுகை நாம் முன்பு கூறியதுபோல் 25 ரக்அத்துகளில் இந்த ஸுன்னத்துகளைப் பேணும்போது மொத்தம் 625 ஸுன்னத்துகளாகிவிடும்.

சில சமயம் ழுஹா நேரம் மற்றும் இரவில் நாம் கூடுதலாக நஃபில் தொழும்போது இந்த ஸுன்னத்துகளின் எண்ணிக்கை அதிகமாகி விடுகின்றது.

சில செயல் ரீதியான ஸுன்னத்துகள் தொழுகை யில் ஒருமுறை அல்லது இருமுறை மட்டும் செய்யப்படுவதுண்டு. உதாரணமாக:

(1) முதல் தக்பீர் சொல்லும்போது இரு கைகளை உயர்த்துவது.

(2) மூன்றாவது ரக்அத்திற்கு எழும்போது கைகளை உயர்த்துவது.

(3) முதல் மற்றும் இரண்டாவது தஷஹ்ஹுதில்

ஆரம்பத்திலிருந்து கடைசிவரை விரலை நீட்டி வைப்பது.

(4) ஸலாம் சொல்லும்போது வலது, இடது பக்கம் திரும்புவது.

(5) இஸ்திராஹா இருப்பு: இது இரண்டு ரக்அத்து தொழுகையில் ஒருமுறையும், நான்கு ரக்அத் தொழுகையில் இருமுறையும் நிகழ்கிறது.

(6) தவர்ருக் இருப்பு: இது இரண்டு தஷஹ்ஹுத் உள்ள தொழுகையில் இரண்டாவது தஷஹ்ஹுதில் செய்யப்படுகிறது.

இந்த ஸுன்னத்துகள் ஒவ்வொரு தொழுகையிலும் ஒருமுறை மட்டுமே நிகழ்கின்றன. ஆனால் தஷஹ்ஹுதில் விரலை நீட்டுவது, ஃபஜ்ரைத் தவிர மற்றவற்றில் இருமுறை நிகழ்கின்றன. அவ்வாறே இஸ்திராஹா நான்கு ரக்அத்து தொழுகையில் இருமுறை நிகழ்கின்றன. ஆக, இவை அனைத்தும் ஃபர்ழான தொழுகையில் 34 ஸுன்னத்துகளாகிவிடும்.

மேற்கூறப்பட்ட 6 ஸுன்னத்துகளில் இரண்டாவது மற்றும் ஆறாவதைத் தவிர மற்றவை நஃபில் தொழுகைகளிலும் 48 முறை நிகழ்கின்றன.

சகோதர சகோதரிகளே! ஸுன்னத்துகளைப் பேணுவதில் ஆர்வம் காட்டுங்கள். உங்கள் தொழுகைகளை சொல், செயல் ரீதியான அனைத்து ஸுன்னத்துகளைக் கொண்டும் அலங்கரித்துக் கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நன்மைகளை அதிகமாக்கித் தருவான்; உங்கள் அந்தஸ்துகளை உயர்த்துவான்.

இப்னுல் கய்யிம் (ரஹ்) கூறுகிறார்கள்: அடியான் அல்லாஹ்விற்கு முன்பாக இருமுறை நிற்கின்றான்.

ஒன்று தொழுகையில், இரண்டாவது மறுமையில் அவனைச் சந்திக்கும் போது. யார் இவ்வுலகில் பயந்து, பணிந்து அல்லாஹ்விற்கு முன் நிற்பாரோ அவருக்கு அல்லாஹ் மறுமையில்

நிற்பதை இலகுவாக்கிவிடுவான். யார் இதை அலட்சியப்படுத்துகிறாரோ அவருக்கு மறுமையில் நிற்பதைச் சிரமப்படுத்தி விடுவான்.

---------

# ஃபர்ழ் தொழுகைக்குப் பின் கடைப்பிடிக்க வேண்டிய ஸுன்னத்துகள்

(1) மூன்றுமுறை பாவமன்னிப்பு கேட்பது (ஸஹீஹ் முஸ்லிம்)

أَسْتَغْفِرُ اللّٰهَ

பொருள்: அல்லாஹ்விடம் மன்னிப்பு கேட்கிறேன்.

(2) اَللّٰهُمَّ أَنْتَ السَّلَامُ وَمِنْكَ السَّلَامُ تَبَارَكْتَ يَاذَاالْـجَلَالِ وَالْإِكْرَامِ

பொருள்: "அல்லாஹ்வே! நீயே ஈடேற்றம் தருபவன்; உன்னிடமிருந்தே ஈடேற்றம் கிடைக்கிறது; நீ வளமிக்கவன்! கண்ணியமும் சங்கையும் மிக்கவனே." (ஸஹீஹ் முஸ்லிம்)

(3) لَا إِلٰهَ إِلَّااللّٰهُ وَحْدَهُ لَاشَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْـحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ اَللّٰهُمَّ لَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ وَلَا يَنْفَعُ ذَاالْـجَدِّ مِنْكَ الْـجَدُّ

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணை துணை இல்லை; அவனுக்கே ஆட்சி அனைத்தும் உரித்தானது; அவனுக்கே புகழ் அனைத்தும் உரித்தானது; அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன். அல்லாஹ்வே! நீ கொடுப்பதைத் தடுப்பவர் எவரும் இல்லை; நீ தடுப்பதை எவரும் கொடுக்க முடியாது; எந்த செல்வந்தனின் செல்வமும் உன்னை விட்டு அவனுக்கு எப்பலனையும் அளிக்க முடியாது. (ஸஹீஹுல் புகாரி)

(4) لَا إِلٰهَ إِلَّااللهُ وَحْدَهُ لَاشَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْـحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ لَا إِلٰهَ إِلَّا اللهُ وَلَا نَعْبُدُ إِلَّا إِيَّاهُ لَهُ النِّعْمَةُ وَلَهُ الْفَضْلُ وَلَهُ الثَّنَاءُ الْـحَسَنُ لَا إِلٰهَ إِلَّا اللهُ مُخْلِصِيْنَ لَهُ الدِّيْنَ وَلَوْ كَرِهَ الْكَافِرُوْنَ

பொருள் : வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு இணை துணை இல்லை; அவனுக்கே ஆட்சி அனைத்தும் சொந்தமானது; அவனுக்கே புகழ் அனைத்தும் சொந்தமானது: அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன்; பாவத்திலிருந்து மீளவோ, நன்மையின் மீது ஆற்றல் பெறவோ முடியாது அல்லாஹ்வைக் கொண்டே தவிர! வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை; அவனைத் தவிர வேறு யாரையும் வணங்க

மாட்டோம்; அவனுக்கே அருட்கொடை அனைத்தும் உரிமையானது; அவனுக்கே கிருபை அனைத்தும் சொந்தமானது; அவனுக்கே அழகிய புகழ் அனைத்தும் சொந்தமானது; வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. வணக்க வழிபாட்டை அவனுக்கே கலப்பற்றதாக ஆக்கி வைக்கிறோம்; காஃபிர்கள் வெறுத்தாலும் சரியே!

(ஸஹீஹ் முஸ்லிம்)

سُبْحَانَ اللّٰهِ

பொருள்: “அல்லாஹ் சகலக் குறைகளிலிருந்து தூய்மையானவன்.”

وَالْحَمْدُ لِلّٰهِ

பொருள்: “அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே!”

وَاللّٰهُ أَكْبَرُ

பொருள்: “அல்லாஹ்வே மிகப் பெரியவன்.”

இவற்றில் ஒவ்வொன்றையும் 33 முறை கூறி பிறகு இதை ஒருமுறைக் கூற வேண்டும்.

(5) لَا إِلٰهَ إِلَّااللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

பொருள்: “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு இணை துணை இல்லை; அவனுக்கே ஆட்சி அனைத்தும் சொந்தமானது; அவனுக்கே புகழ் அனைத்தும் சொந்தமானது; அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன்” (ஸஹீஹ் முஸ்லிம்)

(6) اَللّٰهُمَّ اَعِنِّيْ عَلَى ذِكْرِكَ وَشُكْرِكَ وَحُسْنِ عِبَادَتِكَ

பொருள்: அல்லாஹ்வே... உன்னை நினைவு கூர்வதற்கும், உனக்கு நன்றி செலுத்துவதற்கும்;

உன்னை அழகிய முறையில் வணங்குவதற்கும் எனக்கு நீ உதவி செய்!(ஸுனன் அபூதாவூது)

**(7) اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُ بِكَ مِنَ الْبُخْلِ وَأَعُوْذُ بِكَ مِنَ الْـجُبْنِ وَأَعُوْذُ بِكَ مِنْ أَنْ أُرَدَّ إِلٰى أَرْذَلِ الْعُمُرِ وَأَعُوْذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا وَعَذَابِ الْقَبْرِ**

பொருள்: “அல்லாஹ்வே நிச்சயமாக நான் உன்னிடம் கருமித் தன்தை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன். இன்னும் உன்னிடம் கோழைத் தனத்தை விட்டும் பாதுகாவல் கோருகிறேன். மேலும் நான் வாழ்க்கையில் மிக பலவீனமான நிலைக்குத் தள்ளப்படுவதை விட்டு உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! மேலும், உன்னிடம் இந்த உலகத்தின் குழப்பத்தை விட்டும், கப்ருடைய வேதனையை விட்டும் பாதுகாவல் தேடுகிறேன்!” (ஸஹீஹுல் புகாரி)

(8) பரா (ரழி) அறிவிக்கிறார்கள்: “நாங்கள் அல்லாஹ்வின் தூதருக்குப் பின் தொழுதால் அவர்களது வலப்பக்கத்தில் இருப்பதை விரும்புவோம். (தொழுத பிறகு) அவர்கள் எங்களை முன்னோக்குவார்கள். அது சமயம்,

رَبِّ قِنِـى عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ

பொருள்: “என் இறைவா! உன் அடியார்களை எழுப்பும் நாளில் (ஒன்று சேர்க்கும் நாளில்) என்னை உனது வேதனையை விட்டு பாதுகாத்துக்கொள்” என்று அவர்கள் கூற நான் கேட்டுள்ளேன். (ஸஹீஹ் முஸ்லிம்)

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ هُوَ اللّٰهُ أَحَدٌ (1) اللّٰهُ الصَّمَدُ (2) لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ (3) وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ (4)

(அல் இக்லாஸ் 112:1-4)

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (1) مِنْ شَرِّ مَا خَلَقَ (2) وَمِنْ شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ (3) وَمِنْ شَرِّ النَّفَّاثَاتِ فِي الْعُقَدِ (4) وَمِنْ شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ (5)

(அல் ஃபலக் 113:1-5)

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ النَّاسِ (1) مَلِكِ النَّاسِ (2) إِلَهِ النَّاسِ (3) مِنْ شَرِّ الْوَسْوَاسِ الْخَنَّاسِ (4) الَّذِي يُوَسْوِسُ فِي صُدُورِ النَّاسِ (5) مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ (6)

(அன்னாஸ் 114:1-6)

ஆகிய ஸூராக்களை ஒருமுறை ஓத வேண்டும். ஃபஜ்ர் மற்றும் மக்ரிப் தொழுகைகளுக்குப்

பிறகு மட்டும் மூன்றுமுறை ஓத வேண்டும்.
(ஜாமிவுத் திர்மிதி)

(10) ஆயத்துல் குர்ஸீ ஒருமுறை ஓத வேண்டும். (ஸுனன் நஸாயி)

اَللّٰهُ لَا إِلٰهَ إِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّومُ لَا تَأْخُذُهُ سِنَةٌ وَلَا نَوْمٌ لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ مَنْ ذَا الَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلَّا بِإِذْنِهِ يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيطُونَ بِشَيْءٍ مِنْ عِلْمِهِ إِلَّا بِمَا شَاءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمَاوَاتِ وَالْأَرْضَ وَلَا يَئُودُهُ حِفْظُهُمَا وَهُوَ الْعَلِيُّ الْعَظِيمُ.

(அல்குர்ஆன் 2:255)

(11) மக்ரிப் மற்றும் ஸுப்ஹு தொழுகைக்குப் பின் பத்துமுறை இந்த துஆவை ஓத வேண்டும்.
(ஜாமிவுத் திர்மிதி)

لَا إِلٰهَ إِلَّااللّٰهُ وَحْدَهُ لَاشَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْـحَمْدُ يُحْيِيْ وَيُمِيْتُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

பொருள்: “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு இணை துணை இல்லை; அவனுக்கே ஆட்சி அனைத்தும் சொந்தமானது; அவனுக்கே புகழ் அனைத்தும் சொந்தமானது; அவனே உயிர்ப்பிக்கின்றான்; மரணிக்கச் செய்கின்றான்; அவன் அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன்”

(12) இந்த தஸ்பீஹ்களைச் செய்யும்போது கை விரல்களைக் கொண்டுதான் கணக்கிட வேண்டும்.

(13) இந்த திக்ர்களைத் தொழுத அதே இடத்தில் அமர்ந்து செய்ய வேண்டும்.

ஒரு முஸ்லிம் ஐந்து வேளைத் தொழுகைக்குப்பின்

அன்றாடம் மேற்கூறப்பட்ட ஸுன்னத்துகளை நிறைவேற்றுவதால் ஒவ்வொரு நாளும் 65 ஸுன்னத்துகளை நிறைவேற்றியவராவார். இது ஃபஜ்ர் ,மற்றும் மக்ரிப் தொழுகையில் இன்னும் கூடவும் செய்யலாம்.

ஸுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், அல்லாஹு அக்பர் ஆகிய தஸ்பீஹ்களை ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் நிறைவேற்றுவதால் 500 தர்மத்தின் நன்மைகள் கிடைக்கின்றன.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “ஒவ்வொரு சுப்ஹானல்லாஹ்வும் ஒரு தர்மமாகும்; ஒவ்வொரு அல்லாஹு அக்பரும் ஒரு தர்மமாகும்; ஒவ்வொரு அல்ஹம்துலில்லாஹ்வும் ஒரு தர்மமாகும்; ஒவ்வொரு லாயிலாஹ இல்லல் லாஹ்வும் ஒரு தர்மமாகும்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

அதாவது, தர்மத்தின் நன்மை அவருக்கு கிடைக்கும் என்று இமாம் நவவீ (ரஹ்) அவர்கள் விளக்கம் அளித்துள்ளார்கள்.

இந்த தஸ்பீஹ்களை ஒரு முஸ்லிம் பேணி வரும்போது ஒவ்வொரு நாளும் 500 மரங்கள் சொர்க்கத்தில் அவருக்காக நடப்படுகின்றன.

ஒருமுறை அபூஹுரைரா (ரழி) அவர்கள் செடி ஒன்றை நட்டுக் கொண்டிருந்தார்கள். அதைப் பார்த்த நபி ﷺ அவர்கள், 'அபூஹுரைராவே! இதைவிடச் சிறந்த செடியை உங்களுக்கு நான் அறிவித்துத் தரட்டுமா?' என்று கேட்டார்கள். அதற்கு அவர்கள் ஆம்! அறிவித்துத் தாருங்கள் என்று கூறியவுடன் "சுப்ஹானல்லாஹ், அல்ஹம்துலில்லாஹ், லாயிலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர் என்று கூறுங்கள். இவற்றில் ஒவ்வொன்றுக்காகவும் உங்களுக்கு ஒரு மரம் சொர்க்கத்தில் நடப்படும்" என்று கூறினார்கள். (ஸுனன் இப்னு மாஜா)

ஆயத்துல் குர்ஸீயை ஒவ்வொரு தொழுகைக்குப் பின்னும் வழமையாக ஓதி வருபவருக்கும்

சொர்க்கத்திற்கும் இடையில் மரணத்தைத் தவிர வேறு இல்லை.

நபி ﷺ கூறினார்கள்: மேற்கூறப்பட்ட தஸ்பீஹ்களை வழமையாகப் பேணிவருபவரின் தவறுகள் கடல் நுரையளவு இருப்பினும் அனைத்தும் அழிக்கப்பட்டு விடும். (அதாவது மன்னிக்கப் பட்டுவிடும்) (ஸஹீஹ் முஸ்லிம்)

நபி ﷺ கூறினார்கள்: ஒவ்வொரு தொழுகைக்குப் பின் இந்த தஸ்பீஹ்களை வழமையாகப் பேணி வருபவர் இம்மையிலும் மறுமையிலும் இழிவடைய மாட்டார். (ஸஹீஹ் முஸ்லிம்)

ஃபர்ழ் தொழுகையில் நிகழ்ந்த குறைகள், தவறுகள் அனைத்தும் இந்த தஸ்பீஹ்களால் நிவர்த்தி செய்யப்படுகின்றன.

---------

# காலை மாலை
# பேண வேண்டிய ஸுன்னத்துகள்

(1) ஆயத்துல் குர்ஸீ ஓதுவது

اَللّٰهُ لَا إِلٰهَ إِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّومُ لَا تَأْخُذُهُ سِنَةٌ وَلَا نَوْمٌ لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ مَنْ ذَا الَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلَّا بِإِذْنِهِ يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيطُونَ بِشَيْءٍ مِنْ عِلْمِهِ إِلَّا بِمَا شَاءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمَاوَاتِ وَالْأَرْضَ وَلَا يَئُودُهُ حِفْظُهُمَا وَهُوَ الْعَلِيُّ الْعَظِيمُ.

(அல்பகரா 2:255)

**இதன் பலன்களாவது:**

நபி ﷺ கூறினார்கள் “யார் இதை காலையில்

ஓதுவாரோ, அவர் மாலை வரை ஜின்களை விட்டு பாதுகாக்கப்படுகிறார். அவ்வாறே மாலையில் ஓதுபவர் காலை வரை ஜின்களை விட்டு பாதுகாக்கப்படுகிறார்." (ஸுனன் நஸாயி)

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ هُوَ اللَّهُ أَحَدٌ (1) اللَّهُ الصَّمَدُ (2) لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ (3) وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ (4)

(அல் இக்லாஸ் 112:1-4)

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (1) مِنْ شَرِّ مَا خَلَقَ (2) وَمِنْ شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ (3) وَمِنْ شَرِّ النَّفَّاثَاتِ فِي الْعُقَدِ (4) وَمِنْ شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ (5)

(அல் ஃபலக் 113:1-5)

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ النَّاسِ (1) مَلِكِ النَّاسِ (2) إِلَهِ النَّاسِ (3) مِنْ شَرِّ الْوَسْوَاسِ الْخَنَّاسِ (4) الَّذِي يُوَسْوِسُ فِي صُدُورِ النَّاسِ (5) مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ (6)

(அன்னாஸ் 114:1-6)

இந்த ஸூராக்களை ஓத வேண்டும்.

(ஸுனன் அபூதாவூத்)

**இதன் பலனாவது:**

நபி ﷺ கூறினார்கள்: "யார் இவற்றை மூன்று முறை காலையிலும் மாலையிலும் ஓதுவாரோ அவருக்கு அது அனைத்திற்கும் போதுமானதாகி விடுகிறது." (ஸுனன் அபூதாவூத்)

(5) இந்த துஆவை காலையில் ஓத வேண்டும்.

أَصْبَحْنَا وَأَصْبَحَ الْمُلْكُ لِلَّهِ وَالْحَمْدُ لِلَّهِ لَا إِلَهَ إِلَّا اللَّهُ

وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْـحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ رَبِّ أَسْأَلُكَ خَيْرَ مَا فِيْ هٰذَا الْيَوْمِ وَخَيْرَ مَابَعْدَهُ وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا فِيْ هٰذَا الْيَوْمِ وَشَرِّ مَا بَعْدَهُ رَبِّ أَعُوْذُ بِكَ مِنَ الْكَسَلِ وَسُوْءِ الْكِبَرِ رَبِّ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابٍ فِي النَّارِ وَعَذَابٍ فِي الْقَبْرِ

பொருள்: ஆட்சி அனைத்தும் அல்லாஹ்விற்கு உரித்தான நிலையில் நாங்களும் காலைப் பொழுதை அடைந்தோம். எல்லா புகழும் அல்லாஹ்விற்கே! அல்லாஹ்வைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன் அவனுக்கு இணை துணை இல்லை அவனுக்கே ஆட்சி அனைத்தும் சொந்தமானது; அவனுக்கே புகழ் அனைத்தும் சொந்தமானது; அவனே அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன். என் இறைவா! இன்றையப் பொழுதில்

உள்ள நன்மையையும் இதற்குப் பின் உள்ள நன்மையையும் நான் உன்னிடம் வேண்டுகிறேன்!

இன்றையப் பொழுதில் உள்ள தீங்கை விட்டும் இதற்குப் பின் உள்ளதில் உள்ள தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! என் இறைவா... சோம்பேறித்தனம் மற்றும் முதுமையின் தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! என் இறைவா... நரகத்தின் வேதனையை விட்டும் கப்ரின் வேதனையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! (ஸஹீஹ் முஸ்லிம்)

(6) இந்த துஆவை மாலையில் ஓதவேண்டும்.

أَمْسَيْنَا وَأَمْسَى الْمُلْكُ لِلّٰهِ وَالْـحَمْدُ لِلّٰهِ لَا إِلٰهَ إِلَّا اللّٰهُ وَحْدَهُ لَا شَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْـحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ رَبِّ أَسْأَلُكَ خَيْرَ مَا فِيْ هٰذِهِ الَّيْلَةِ وَخَيْرَ مَابَعْدَهُ وَأَعُوْذُ بِكَ مِنْ شَرِّ مَا فِيْ هٰذِهِ الَّيْلَةِ وَشَرِّ مَا

بَعْدَهُ رَبِّ أَعُوْذُ بِكَ مِنَ الْكَسَلِ وَسُوْءِ الْكِبَرِ رَبِّ أَعُوْذُ بِكَ مِنْ عَذَابٍ فِي النَّارِ وَعَذَابٍ فِي الْقَبْرِ

பொருள்: "ஆட்சி அனைத்தும் அல்லாஹ்விற்கே உரித்தான நிலையில் நாங்களும் மாலைப் பொழுதை அடைந்தோம். எல்லாப் புகழும் அல்லாஹ்விற்கே! அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை; அவன் தனித்தவன்: அவனுக்கு இணை துணை இல்லை: அவனுக்கே ஆட்சி அனைத்தும் சொந்தமானது; அவனுக்கே புகழ் அனைத்தும் சொந்தமானது: அவனே அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன். என் இறைவா… இந்த இரவில் உள்ள நன்மையையும் இதற்குப் பின் உள்ள நன்மையையும் நான் உன்னிடம் வேண்டுகிறேன்! இன்றைய இரவில் உள்ள தீங்கை விட்டும் இதற்குப் பின் உள்ளதில் உள்ள தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! என் இறைவா…

சோம்பேறித்தனம் மற்றும் முதுமையின் தீங்கை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! என் இறைவா... நரகத்தின் வேதனையை விட்டும் கப்ரின் வேதனையை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! (ஸஹீஹ் முஸ்லிம்)

(7) காலையில் ஓத வேண்டிய துஆ.

اَللّٰهُمَّ بِكَ أَصْبَحْنَا وَبِكَ أَمْسَيْنَا وَبِكَ نَحْيَا وَبِكَ نَمُوْتُ وَإِلَيْكَ النُّشُوْرُ

பொருள்: அல்லாஹ்வே! உன்னைக்கொண்டே காலையை அடைந்தோம்; உன்னைக்கொண்டே (நேற்றைய) மாலையை அடைந்தோம்; உன்னைக் கொண்டே வாழ்கிறோம்; உன்னைக் கொண்டே மரணிப்போம்; எழுப்பப்படுவதும் உன் பக்கமே! (ஜாமிவுத் திர்மிதி)

மாலையில் ஓத வேண்டிய துஆ

اَللّٰهُمَّ بِكَ أَمْسَيْنَا وَبِكَ أَصْبَحْنَا وَبِكَ نَحْيَا وَبِكَ

نَمُوْتُ وَإِلَيْكَ الْمَصِيْرُ

அல்லாஹ்வே… உன்னைக்கொண்டே மாலையை அடைந்தோம்; உன்னைக்கொண்டே (நேற்றைய) காலையை அடைந்தோம்; உன்னைக் கொண்டே வாழ்கிறோம்; உன்னைக்கொண்டே மரணிப்போம்; மீள்வது உன் பக்கமே! (ஸஹீஹ் முஸ்லிம்)

(8) اَللّٰهُمَّ أَنْتَ رَبِّيْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ خَلَقْتَنِيْ وَأَنَا عَبْدُكَ وَأَنَا عَلٰى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ أَعُوْذُبِكَ مِنْ شَرِّ مَاصَنَعْتُ أَبُوْءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ وَأَبُوْءُ بِذَنْبِيْ فَاغْفِرْ لِـيْ فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوْبَ إِلَّا أَنْتَ

பொருள்: "அல்லாஹ்வே! நீயே இறைவன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை; நீயே என்னைப் படைத்தாய்; நான் உன் அடிமை; என்னால் முடிந்தளவு நான் உனது ஒப்பந்தத்தையும்

உன் வாக்கையும் நிறைவேற்றுகின்றேன்; நான் செய்தவற்றின் தீங்கை விட்டு உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்! என் மீதுள்ள உன் அருட்கொடையை நான் உன்னிடம் ஒப்புக் கொள்கிறேன்; எனது பாவத்தையும் ஒப்புக் கொள்கிறேன்; என்னை மன்னித்து விடு! நிச்சயமாக உன்னைத் தவிர பாவங்களை மன்னிப்பவன் யாரும் இல்லை.

(ஸஹீஹுல் புகாரி)

**இதன் பலன்:** “யார் இந்த மேன்மைமிகு வாக்கி யங்களை நம்பிக்கை கொண்டவராக மாலையில் கூறி, அன்று இரவு மரணித்து விட்டாரோ அவர் சொர்க்கம் செல்வார். அவ்வாறே காலையில் கூறி அன்றைய பகலில் மரணித்து விட்டாலும் சொர்க்கம் செல்வார். (ஸஹீஹுல் புகாரி)

(9). اَللّٰهُمَّ إِنِّـيْ أَصْبَحْتُ أُشْهِدُكَ وَأُشْهِدُ حَمَلَةَ

عَرْشِكَ وَمَلَائِكَتَكَ وَجَمِيْعَ خَلْقِكَ أَنَّكَ أَنْتَ اللّٰهُ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ وَأَنَّ مُحَمَّدًا عَبْدُكَ وَرَسُوْلُكَ

பொருள்: “அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னை சாட்சியாக்கியவனாக: மேலும், உன் அர்ஷைச் சுமந்து இருக்கும் வானவர்களையும் சாட்சியாக்கியவனாக காலையில் விழித்தேன். நிச்சயமாக நீதான் அல்லாஹ். உன்னைத்தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை, நீ தனித்தவன்; உனக்கு இணை துணை இல்லை; நிச்சயமாக முஹம்மது நிச்சயமாக நீதான் அல்லாஹ், உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை, நீ தனித்தவன்; உனக்கு இணை துணை இல்லை; நிச்சயமாக முஹம்மது ﷺ உனது அடிமையும் உனது தூதரும் ஆவார்கள். இதை நான் நான்குமுறை கூற வேண்டும். (ஸுனன் அபூதாவூது)

**இதன் பலன்:** “இதைக் காலையில் அல்லது (மாலையில் நான்குமுறை யார் கூறுவாரோ, அவரை அல்லாஹ் நரகத்திலிருந்து உரிமையிட்டு (விடுதலை செய்து) விடுவான்.”

மாலையில் ஓதும் போது காலையில் விழித்தேன் என்ற வாசகத்திற்குப் பதிலாக மாலைப் பொழுதை அடைந்தேன் என்று ஓதிக் கொள்ளவும்.

**(10). اَللّٰهُمَّ مَا أَصْبَحَ بِـيْ مِنْ نِّعْمَةٍ أَوْ بِأَحَدٍ مِّنْ خَلْقِكَ فَمِنْكَ وَحْدَكَ لَا شَرِيْكَ لَكَ فَلَكَ الْـحَمْدُ وَلَكَ الشُّكْرُ**

அல்லாஹ்வே! எனக்கு அல்லது உனது அடியார்களில் எவருக்காயினும் இன்றைய காலையில் (மாலையில்) கிடைத்த எந்த அருளானாலும் அது உன் புறத்திலிருந்தே கிடைத்தது. நீ தனித்தவன்; உனக்கு இணை துணை இல்லை; உனக்கே புகழனைத்தும்!

**இதன் பலன்:** “யார் காலையில் இதை ஓதுவாரோ அவர் அன்றையப் பொழுதிற்குரிய நன்றியைச் செலுத்தியவராவார். யார் இதை மாலையில் ஓதுவாரோ அவர் அன்றைய இரவிற்குரிய நன்றியைச் செலுத்தியவராவார்.

(ஸுனனுன் நஸாயி)

**(11). اَللّٰهُمَّ عَافِنِيْ فِيْ بَدَنِيْ اَللّٰهُمَّ عَافِنِيْ فِيْ سَمْعِيْ اَللّٰهُمَّ عَافِنِيْ فِيْ بَصَرِيْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ اَللّٰهُمَّ إِنِّيْ أَعُوْذُبِكَ مِنَ الْكُفْرِ وَالْفَقْرِ وَأَعُوْذُبِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ**

பொருள்: “அல்லாஹ்வே என் உடலில் எனக்கு முழு சுகத்தைத் தா! அல்லாஹ்வே... என் செவியில் எனக்கு முழு சுகத்தைத் தா! அல்லாஹ்வே... என் பார்வையில் எனக்கு முழு

சுகத்தைத் தா! உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அல்லாஹ்வே... நிச்சயமாக நான் உன்னிடம் நிராகரிப்பை விட்டும் வறுமையை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்! உன்னிடம் கப்ரின் வேதனையை விட்டும் பாதுகாப்புத் தேடுகிறேன்! உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை."

இதை மூன்றுமுறை ஓத வேண்டும்.

(முஸ்னது அஹ்மது)

**(12). حَسْبِيَ اللّٰهُ لَا إِلٰهَ إِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيْمِ**

பொருள்: "எனக்குப் போதுமானவன் அல்லாஹ்வே! அவனைத்தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை, அவனிடமே நான் பொறுப்பு ஒப்படைத்தேன்: அவனே மகத்தான அர்ஷின் அதிபதியாவான்."

இதை ஏழுமுறை ஓதவேண்டும். (இதை அறிஞர் இப்னுஸ் ஸின்னி அவர்கள் 'மர்ஃபூ' ஆகவும் இமாம் அபூதாவூத் அவர்கள் 'மவ்கூஃப்' ஆகவும் அறிவிக்கிறார்கள்.)

இதைக் காலையில் ஏழுமுறை, மாலையில் ஏழுமுறை யார் ஓதுவாரோ, இவ்வுலக மறுவுலக வாழ்க்கையில் அவருக்குக் கவலையளிக்கும் அனைத்திற்கும் அல்லாஹ் போதுமானவன். (அதாவது, அவனைப் பாதுகாக்கப் போதுமானவன்)

(13) اَللّٰهُمَّ إِنِّـيْ أَسْأَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ. اَللّٰهُمَّ إِنِّـيْ أَسْأَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ فِيْ دِيْنِيْ وَدُنْيَايَ وَأَهْلِيْ وَمَالِيْ. اَللّٰهُمَّ اسْتُرْ عَوْرَاتِيْ وَآمِنْ رَوْعَاتِيْ. اَللّٰهُمَّ احْفَظْنِيْ مِنْ بَيْنِ يَدَيَّ وَمِنْ خَلْفِيْ وَعَنْ يَّمِيْنِيْ وَعَنْ شِمَالِيْ وَمِنْ فَوْقِيْ وَأَعُوْذُ

بِعَظَمَتِكَ أَنْ أُغْتَالَ مِنْ تَـحْتِيْ

பொருள்: “அல்லாஹ்வே... நிச்சயமாக நான் உன்னிடம் மன்னிப்பையும் இம்மையிலும் மறுமையிலும் முழு சுகத்தைக் கேட்கிறேன். அல்லாஹ்வே... எனது மார்க்கத்திலும் எனது உலக வாழ்க்கையிலும் எனது குடும்பத்திலும் எனது பொருளிலும் முழு சுகத்தைக் கேட்கிறேன்! அல்லாஹ்வே... எனது அந்தரங்கங்களை மறைத்து விடு! எனது அச்சங்களுக்கு பாதுகாப்பு வழங்கு! அல்லாஹ்வே... என்னை, எனக்கு முன்னும் எனக்கு பின்னும் என் வலப்பக்கத்திலிருந்தும் என் இடப்பக்கத்திலிருந்து எனக்கு மேலிருந்தும் பாதுகாத்துக்கொள்! எனக்கு கீழிருந்து நான் அழிக்கப்படுவதை விட்டு உனது மகத்துவத்தை கொண்டு பாதுகாவல் தேடுகிறேன்.”

(ஸூனன் அபூதாவூது)

(14). اَللّٰهُمَّ عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ فَاطِرَ السَّمٰوَاتِ وَالْأَرْضِ رَبَّ كُلِّ شَيْءٍ وَّمَلِيْكَهُ أَشْهَدُ أَنْ لَّا إِلٰهَ إِلَّا أَنْتَ أَعُوْذُ بِكَ مِنْ شَرِّ نَفْسِيْ وَمِنْ شَرِّ الشَّيْطَانِ وَشِرْكِهِ وَأَنْ أَقْتَرِفَ عَلٰى نَفْسِيْ سُوْءًا أَوْ أَجُرَّهُ إِلٰى مُسْلِمٍ

பொருள்: "அல்லாஹ்வே! மறைவானதையும், வெளிப்படையானதையும் அறிந்தவனே! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! அனைத்துப் பொருட்களின் இறைவனே! அவற்றின் அரசனே! உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை என்று நான் சாட்சி கூறுகிறேன். எனது நஃப்ஸின் (மன இச்சையின்) கெடுதியை விட்டும் ஷைத்தானுடைய தீங்கை விட்டும் அவனால் ஏற்படுகின்ற இணை வைத்தலை விட்டும் எனக்கு எதிராக நான் தீங்கிழைத்துக்

கொள்வதை விட்டும் அல்லது ஒரு முஸ்லிமுக்கு தீங்கு செய்வதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன்." (ஜாமிவுத் திர்மிதி)

(15). بِسْمِ اللهِ الَّذِيْ لَا يَضُرُّ مَعَ اسْمِهِ شَيْءٌ فِي الْأَرْضِ وَلَا فِي السَّمَاءِ وَهُوَ السَّمِيْعُ الْعَلِيْمُ

பொருள்: "அல்லாஹ்வின் பெயரால்... அவன் எத்தகையவனென்றால் அவனது பெயரைக் கூறிய பின் பூமியிலும் வானத்திலும் எதுவும் எந்த இடையூறும் செய்யாது. அவனே அனைத்தையும் கேட்பவன்; நன்கறிந்தவன்.

இதை மூன்றுமுறை ஓத வேண்டும்

(ஜாமிவுத் திர்மிதி)

(16) رَضِيْتُ بِاللهِ رَبًّا وَّبِالْإِسْلَامِ دِيْنًا وَّبِمُحَمَّدٍ ﷺ نَبِيًّا

பொருள்: "அல்லாஹ்வை இறைவனாகவும்,

இஸ்லாமை மார்க்கமாகவும், முஹம்மது ﷺ அவர்களைத் தூதராகவும் பொருந்திக் கொண்டேன்." (ஸுனன் அபூதாவூது)

இதை மூன்றுமுறை ஓத வேண்டும்.

இதை யார் காலையில் மூன்றுமுறை மாலையில் மூன்றுமுறை ஓதுவாரோ அவரை அல்லாஹு தஆலா மறுமையில் மகிழ்ச்சியுறச் செய்வான்.

**(17). يَا حَـيُّ يَاقَيُّوْمُ بِرَحْـمَتِكَ أَسْتَغِيْثُ أَصْلِحْ لِـيْ شَأْنِـيْ كُلَّهُ وَلَا تَكِلْنِيْ إِلٰى نَفْسِيْ طَرْفَةَ عَيْنٍ**

பொருள்: "என்றும் உயிரோடு இருப்பவனே! நிலையானவனே! உனது கருணை, அன்பைக் கொண்டு உன்னிடம் உதவி கேட்கிறேன். எனது எல்லாக் காரியத்தையும் நீ சீராக்கு! கண் சிமிட்டும் நேரம் கூட நீ என்னை, என்னிடம் ஒப்படைத்து விடாதே!" (முஸ்தத்ரகுல் ஹாகிம்)

## (18). أَصْبَحْنَا (أَمْسَيْنَا) عَلٰى فِطْرَةِ الْإِسْلَامِ وَعَلٰى كَلِمَةِ الْإِخْلَاصِ وَعَلٰى دِيْنِ نَبِيِّنَا مُـحَمَّدٍ ﷺ وَعَلٰى مِلَّةِ أَبِيْنَا إِبْرَاهِيْمَ حَنِيْفًا مُّسْلِمًا وَّمَا كَانَ مِنَ الْمُشْرِكِيْنَ

பொருள்: "இஸ்லாமின் இயற்கை மீதும், கலப்பற்ற தூய்மையான வசனத்தின் மீதும், எங்கள் நபி முஹம்மது ﷺ அவர்களில் மார்க்கத்தின் மீதும் எங்கள் தந்தை இப்ராஹீமின் வழிமுறையின் மீதும் காலைப் (மாலைப்) பொழுதை அடைந்தோம். அவர் அல்லாஹ் ஒருவனின் பக்கமே முற்றிலும் திரும்பியவர். அல்லாஹ்விற்கு பணிந்தவர்; அவர் இணைவைப்பவர்களில் உள்ளவர் அல்ல." (முஸ்னது அஹ்மது)

## (19). سُبْحَانَ اللّٰهِ وَبِـحَمْدِهِ

பொருள்: அல்லாஹ்வைப் புகழ்வதுடன் அவனைத் தூய்மைப்படுத்துகிறேன்.

(இதை நூறுமுறை காலையிலும் நூறுமுறை மாலையிலும் ஓத வேண்டும்) (ஸஹீஹுல் புகாரி)

**பலன்:** கடல் நுரைபோல் பாவம் இருப்பினும் அனைத்தும் மன்னிக்கப்பட்டுவிடும். இவர் கூறியதைப் போன்று கூறியவரைத் தவிர அல்லது இவரைவிட அதிகம் கூறியவரைத் தவிர யாரும் இவரை விட சிறந்ததைச் செய்தவராக இருக்க மாட்டார். (ஸஹீஹ் முஸ்லீம்)

## (20). لَا إِلٰهَ إِلَّااللّٰهُ وَحْدَهُ لَاشَرِيْكَ لَهُ لَهُ الْمُلْكُ وَلَهُ الْـحَمْدُ وَهُوَ عَلٰى كُلِّ شَيْءٍ قَدِيْرٌ

பொருள்: காலையில் மட்டும் ஓத வேண்டியது: “வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை; அவன் தனித்தவன்; அவனுக்கு இணை, துணை இல்லை; அவனுக்கே ஆட்சி அனைத்தும் சொந்தமானது; அவனுக்கே புகழ் அனைத்தும் சொந்தமானது;

அவனே அனைத்துப் பொருட்களின் மீதும் பேராற்றலுடையவன். (ஸஹீஹுல் புகாரி)

இதை 100 முறை கூறுவதால் 10 அடிமைகளை உரிமையிட்ட (விடுதலை) செய்த நன்மைகள் கிடைக்கும். 100 நன்மைகள் எழுதப்படும் 100 பாவங்கள் அழிக்கப்படும். அன்றைய மாலை வரை ஷைத்தானின் தீங்கை விட்டு அவருக்கு பாதுகாப்பு வழங்கப்படும்.

## (21). أَسْتَغْفِرُ اللّٰهَ وَأَتُوْبُ إِلَيْهِ

பொருள்: நான் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோருகிறேன் அவனிடமே நான் திரும்புகிறேன். இதை 100 முறை ஓதவேண்டும்.

(ஸஹீஹுல் புகாரி)

## (22). اَللّٰهُمَّ إِنِّـيْ أَسْأَلُكَ عِلْمًا نَّافِعًا وَّرِزْقًا طَيِّبًا وَّعَمَلًا مُّتَقَبَّلًا

(இதைக் காலையில் ஓத வேண்டும்)

பொருள்: அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் பயனுள்ள கல்வியை, தூய்மையான (ஆகுமான) உணவை, ஏற்றுக் கொள்ளப்பட்ட அமலைக் கேட்கிறேன். (ஸுனன் இப்னுமாஜா)

**(23). سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ عَدَدَ خَلْقِهِ وَرِضَا نَفْسِهِ وَزِنَةَ عَرْشِهِ وَمِدَادَ كَلِمَاتِهِ**

இதை மூன்றுமுறை ஓத வேண்டும்.

பொருள்: அல்லாஹ்வைப் புகழ்ந்து தூய்மைப் படுத்துகிறேன் - அவனது படைப்புகளின் எண்ணிக்கை அளவு; அவன் திருப்திப்படும் அளவு; அவனது அர்ஷின் கனமளவு; அவனது வார்த்தைகளின் மையளவு (அல்லாஹ்வைப் புகழ்ந்து தூய்மைப்படுத்துகிறேன்.)

(ஸஹீஹ் முஸ்லிம்)

**(24) أَعُوْذُ بِكَلِمَاتِ اللهِ التَّامَّاتِ مِنْ شَرِّ مَا خَلَقَ**

(இதை மாலையில் மூன்றுமுறை கூற வேண்டும்) (ஜாமிவுத் திர்மிதி)

பொருள்: அல்லாஹ்வின் முழுமையான வார்த்தை களைக் கொண்டு அவன் படைத்தவற்றின் தீங்கை விட்டு பாதுகாவல் கோருகிறேன்.

இந்தத் திக்ருகளில் ஒவ்வொன்றைக் கூறும்போதும் ஒரு நபிவழியை நாம் நிறைவேற்றியவர்களாகி றோம். ஆகவே, நாம் காலையிலும் மாலையிலும் இந்த ஸுன்னத்துகளை பேணுவதில் அதிக ஆர்வம் காட்ட வேண்டும். இதன் மூலம் அதிகமான ஸுன்னத்துகளை நிறைவேற்றுவதற்கு நமக்கு வாய்ப்பு கிடைக்கும்.

இந்த திக்ருகளை மனத்தூய்மையுடனும், நம்பிக்கை யுடனும், உளப்பூர்வமாக சொல்ல வேண்டும். மேலும், இந்த திக்ருகளின் கருத்துக்களைப் புரிந்து அதை சிந்தித்தவர்களாகவும் உணர்ந்தவர் களாகவும் ஓத வேண்டும். அப்போதுதான் நமது வாழ்க்கையில் இந்தத் திக்ருகளும் அதன் கருத்துகளும் நல்ல தாக்கங்களை உண்டாக்கும்.

# மக்களைச் சந்திக்கும் போது பேணவேண்டிய ஸுன்னத்துகள்

(1) اَلسَّلَامُ عَلَيْكُمْ وَرَحْمَةُ اللهِ وَبَرَكَاتُهُ

என்று முகமன் கூற வேண்டும்.

பொருள்: "உங்களுக்கு ஈடேற்றமும் அல்லாஹ்வின் கருணையும் அவனது அபிவிருத்தியும் உண்டாகட்டும்"

"இஸ்லாமில் எது சிறந்தது?" என்று நபி ﷺ அவர்களிடம் கேட்கப்பட்டது. அதற்கு உணவளிப்பது, அறிந்தவருக்கும் அறியாதவருக்கும் ஸலாம் சொல்வது என்று கூறினார்கள். (ஸஹீஹுல் புகாரி)

ஒருவர் நபி ﷺ அவர்களிடம் வந்து அஸ்ஸலாமு அலைக்கும் என்று கூறினார். அவருக்கு நபி ﷺ அவர்கள் பதில் கூறிய பிறகு பத்து என்றார்கள். பிறகு மற்றொருவர் வந்து அஸ்ஸலாமு

அலைக்கும் வரஹ்மத்துல்லாஹ் என்று கூறினார். அவருக்கும் நபி ﷺ அவர்கள் பதில் கூறி இருபது என்றார்கள். பிறகு மற்றொருவர் வந்து அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி வபரகாத்துஹு என்று கூறி அமர்ந்தார். அவருக்குப் பதில் கூறிய நபி ﷺ அவர்கள் முப்பது என்று கூறினார்கள்.

(ஸுனன் அபூதாவூது)

அன்புச் சகோதர சகோதரிகளே! ஸலாமை முழுமையாகக் கூறாமல் சில வார்த்தைகளோடு நிறுத்திக் கொள்பவர் எவ்வளவு நன்மைகளை இழக்கிறார். ஸலாமை முழுமையாகச் சொல்லும் போது 30 நன்மைகளை அடைந்து கொள்கிறோம். ஒரு நன்மைக்கு குறைந்த பட்சம் பத்து நன்மைகள் கிடைக்கும், அந்த அடிப்படையில் முப்பது நன்மைகள் என்பது முந்நூறு நன்மைகளாகும். இதற்கு மேலும் அவை பன்மடங்குகளாகவும் ஆக்கப்படலாம்.

அன்புச் சகோதர சகோதரிகளே! ஸலாமை

வபரகாதுஹு வரை முழுமையாகக் கூற பயிற்சி எடுத்து கொள்ளுங்கள். அதனால் மகத்தான நன்மை அடைவீர்கள்.

ஸலாம் சொல்வதற்கு நமக்கு அன்றாடம் பல வாய்ப்புகள் உள்ளன. வீட்டிற்குள் நுழையும் போது, வெளியேறும்போது, பள்ளிக்குள் நுழையும்போது, வெளியே வரும்போது பிறரைச் சந்திக்கும்போது, பிரியும்போது, சபைக்குச் செல்லும்போது, சபையை விட்டு வெளியேறும் போது என்று பலமுறை ஸலாம் கூறுவதற்கு நமக்கு வாய்ப்புண்டு. ஒவ்வொரு முறையும் நாம் முழுமையாக ஸலாம் கூறினால் பெரும் நன்மையை அடைந்து கொள்ளலாம்.

ஒருவரைச் சந்தித்துப் பிரியும் போது கண்டிப்பாக ஸலாம் கூறிய பிறகே பிரியவேண்டும்.

நபி ﷺ கூறினார்கள்: ஒருவர் சபைக்குச் சென்றால் ஸலாம் கூறட்டும்; சபையை விட்டுப் பிரியும் போதும் ஸலாம் சொல்லட்டும். முந்தியது

பிந்தியதைவிட அதிகம் கடமையானதல்ல.
(ஸுனன் அபூதாவூத்)

பள்ளிக்குள் நுழையும் போது, பள்ளியை விட்டு வெளியேறும் போது வீட்டுக்குள் நுழையும் போது வீட்டை விட்டு வெளியேறும் போது என குறைந்தது 20 முறையாவது ஸலாம் சொல்லலாம். இந்த எண்ணிக்கை சில வேளைகளில் கூடலாம். (உம்:) வேலைக்குச் செல்கிறோம்; அங்கு பல நண்பர்களைச் சந்திக்கிறோம்; பலருடன் தொலைபேசியில் பேசுகிறோம்; வழியில் பல நண்பர்களைச் சந்திக்கிறோம்; அறிமுகமானவர் அல்லது அறிமுகமற்றவர் என்று வித்தியாசம் பாராமல் நாம் ஸலாம் சொல்லும் போது இந்த எண்ணிக்கை மேலும் கூடலாம், குறைய வாய்ப்பில்லை.

## (2) புன்முறுவலாகச் சிரிப்பது.

நபி ﷺ கூறினார்கள்: “ஒருக்காலும் நன்மையில் எதையும் அற்பமாகக் கருதாதே! அது உனது

சகோதரரை முகமலர்ச்சியுடன் நீ சந்திப்பதாயினும் சரியே! (ஸஹீஹ் முஸ்லிம்)

## (3) கை கொடுத்துக் கொள்ள வேண்டும்.

நபி ﷺ கூறினார்கள்: இரண்டு முஸ்லிம்கள் சந்திக்கும் போது கை கொடுத்துக்கொண்டால் அவர்கள் பிரிவதற்கு முன் அவர்களின் பாவங்களை அல்லாஹ் மன்னித்து விடுவான். (ஸுனன் அபூதாவூது)

இமாம் நவவி கூறுகிறார்கள்: "ஒவ்வொரு சந்திப்பிலும் முஸாஃபஹா (கை கொடுப்பது) விரும்பத்தக்கதாகும்."

ஒருவரைச் சந்திக்கும் போது ஸலாம் கூறி, புன்முறுவலுடன் முஸாபஹா செய்தால் ஒரே நேரத்தில் மூன்று ஸுன்னத்துகளை நிறைவேற்றியவர்களாக ஆவோம்.

## (4) நல்ல வார்த்தைகளைப் பேச வேண்டும்

அல்லாஹ் கூறுகிறான்:

وَقُلْ لِعِبَادِي يَقُولُوا الَّتِي هِيَ أَحْسَنُ إِنَّ الشَّيْطَانَ يَنْزَغُ بَيْنَهُمْ إِنَّ الشَّيْطَانَ كَانَ لِلْإِنْسَانِ عَدُوًّا مُبِينًا

(நபியே! எனக்குக் கட்டுப்பட்ட) என்னுடைய அடியார்களுக்கு நீங்கள் கூறுங்கள்: அவர்கள் (எந்த மனிதருடன் பேசிய போதிலும்) எது நல்லதோ அதையே கூறவும். நிச்சயமாக ஷைத்தான் அவர்களுக்கிடையில் (கெட்ட வார்த்தைகளைக் கூறும்படி செய்து) கெடுதலே செய்வான். (ஏனென்றால்) நிச்சயமாக ஷைத்தான் மனிதனுக்கு பகிரங்கமான எதிரியாக இருக்கிறான். (ஆகவே, எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள்.) (பனீ இஸ்ராயீல் 17:53)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “நல்ல வார்த்தையும் தர்மமாகும்.” (ஸஹீஹுல் புகாரி)

நல்ல வார்த்தை என்பது ஒரு விசாலமான, சொல்லாகும். இதில் திக்ர் செய்வது, துஆ கேட்பது, ஸலாம் சொல்வது, அழகிய பண்புகள்,

நல்ல ஒழுக்கங்கள் மனம் குளிரும்படியான பேச்சுகள், பிறரை நோகடிக்காத செயல்கள் அனைத்தும் அடங்கும்.

நல்ல பேச்சுகள், அவற்றைக் கேட்கும் மனிதனின் உள்ளத்தை பேசுபவரின் பக்கம் வசப்படுத்தி விடுகின்றன. உயிருக்கும் புத்துணர்ச்சி அளித்து உள்ளத்திற்கு நிம்மதியையும் அமைதியையும் வழங்குகின்றன.

நல்ல பேச்சுக்கள் நம்பிக்கையாளர்களின் உள்ளத்தில் இருக்கும் ஒளி, நேர்வழி, நல்லறிவு ஆகியவற்றுக்குச் சான்றாகும்.

காலை முதல் மாலை வரை, மாலை முதல் காலை வரை மனைவியருடன், பிள்ளைகளுடன், நண்பர்கள், உற்றார் உறவினர்கள், பணியாளர்கள், அண்டை வீட்டார்கள், சந்திப்பவர்கள் ஆகியோருடன் அழகிய பேச்சுகளை பேசுவதால் நமது முழு வாழ்க்கையையும் நன்மைகளால் செழிப்பாக்கலாம்.

# சாப்பிடும் போது பேணவேண்டிய ஸுன்னத்துகள்

1. **முதலில் பிஸ்மில்லாஹ் சொல்ல வேண்டும்.**

2. **வலது கையால் சாப்பிட வேண்டும்.**

3. **தனக்கு அருகில் உள்ளதைச் சாப்பிட வேண்டும்.**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “சிறுவரே! அல்லாஹ்வின் பெயர் கூறு! உனது வலது கையால் சாப்பிடு! உனக்கு அருகில் இருந்து சாப்பிடு! (ஸஹீஹ் முஸ்லிம்)

4. **உணவு கீழே விழுந்துவிட்டால் அதைச் சுத்தம் செய்து விட்டுச் சாப்பிட வேண்டும்.**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “உங்களில் ஒருவர் சாப்பிடும் போது உணவு கீழே விழுந்து விட்டால் அதிலுள்ள தூசியை அகற்றிவிட்டு சாப்பிடட்டும்.” (ஸஹீஹ் முஸ்லிம்)

## 5. மூன்று விரல்களால் சாப்பிடவும்.

நபி ﷺ அவர்கள் மூன்று விரல்களில் சாப்பிடுவார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

இதுதான் நபி ﷺ அவர்களின் பெரும்பாலான வழக்கமாகும். எனவே, இதுவே மிக சிறப்பிற்குரிய வழிமுறையாகும். (அவசியம் ஏற்பட்டால் தவிர மற்ற விரல்களை பயன்படுத்துவதை தவிர்க்க வேண்டும்.)

## 6. பாத்திரத்தை வழித்து சாப்பிட வேண்டும், இறுதியில் விரல்களை சூப்ப வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “உணவின் எந்தப் பகுதியில் பரகத் உள்ளது என்று உங்களுக்குத் தெரியாது.” (ஸஹீஹ் முஸ்லிம்)

## 7. சாப்பிட்டபின் அல்லாஹ்வைப் புகழ வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “சாப்பிட்டபின் அல்லாஹ்வைப் புகழ்பவரை நிச்சயமாக

அல்லாஹ் திருப்தி கொள்கிறான்.

(ஸஹீஹ் முஸ்லிம்)

நபி ﷺ அவர்கள் கற்றுக் கொடுத்த துஆக்களில் இதுவும் ஒன்று.

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِيْ أَطْعَمَنِيْ هٰذَا
وَرَزَقَنِيْهِ مِنْ غَيْرِ حَوْلٍ مِّنِّيْ وَلَا قُوَّةٍ

பொருள்: "அல்லாஹ்வுக்கே எல்லா புகழும் இதை அவனே எனக்கு, எனது எவ்வித ஆற்றலும் சக்தியும் இன்றி வழங்கினான்."

இந்த துஆவை ஓதுவதால் முன்சென்ற பாவங்களை அல்லாஹ் மன்னித்து விடுகிறான்.

(ஸுனன் அபூதாவூத்)

ஒருவர் பொதுவாக மூன்று வேளை சாப்பிடுகிறார் என்று வைத்தால் 21 ஸுன்னத்துக்களை நிறைவேற்றுகிறார். வேறு ஏதாவது இடையில் சிற்றுண்டி சாப்பிட்டால் அப்போதும் இதைப்

பேணினால் ஸுன்னத்துகளின் எண்ணிக்கை கூடி விடுகிறது.

---------

# தண்ணீர் குடிக்கும்போது பேணவேண்டிய ஸுன்னத்துக்கள்

**(1) பிஸ்மில்லாஹ் சொல்வது.**

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

பொருள்: "அல்லாஹ்வின் பெயரால்..."

**(2) வலது கையால் குடிக்க வேண்டும்.**

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "சிறுவரே! அல்லாஹ்வின் பெயர் கூறு! உனது வலது கையால் சாப்பிடு! உனக்கு அருகில் இருந்து சாப்பிடு!" (ஸஹீஹ் முஸ்லிம்)

**(3) குடிக்கும்போது பாத்திரத்தில் மூச்சு விடாமல் வெளியே விட வேண்டும்.**

அதாவது ஒரே மூச்சில் குடித்து முடிக்காமல் மூன்று மூச்சில் குடிக்க வேண்டும்.

நபி ﷺ அவர்கள் மூன்றுமுறை மூச்சு விட்டு குடிப்பார்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

### (4) உட்கார்ந்து குடிக்க வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: நீங்கள் நின்று கொண்டு குடிக்காதீர்கள். (ஸஹீஹ் முஸ்லிம்)

### (5) குடித்த பிறகு அல்லாஹ்வைப் புகழ வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: அடியான் சாப்பிட்டபின் அல்லாஹ்வைப் புகழும் போதும் அடியான் குடித்தபின் அல்லாஹ்வைப் புகழும் போதும் அல்லாஹ் அந்த அடியான் மீது திருப்தி கொள்கிறான். (ஸஹீஹ் முஸ்லிம்)

குறைந்தது நான்குமுறை நீர் அருந்தினாலும் ஒரு நாளைக்கு 20 ஸுன்னத்துக்களை நிறைவேற்றியவர்களாக ஆவோம்.

நாம் குடிக்கும் பானம் குளிர்ந்ததாகவோ சூடாகவோ எப்படி இருப்பினும் இவற்றைக் கடைபிடிக்க

வேண்டும். இதைத் தண்ணீர் குடிக்கும் போது மட்டும் பேண வேண்டும் என்று சிலர் விளங்கி இருப்பது தவறாகும்.

## நஃபில்களை வீட்டில் தொழுவது

(1) கடமையான தொழுகைகளைத் தவிர மற்ற தொழுகைகளை வீட்டில் தொழுவதே ஒருவரின் தொழுகையில் மிகச் சிறந்த தொழுகையாகும்.
(ஸஹீஹுல் புகாரி)

மக்கள் பார்க்காத அளவில் நஃபில் தொழுவது மக்கள் முன்னிலையில் 25 முறை தொழுவதற்குச் சமமாகும்.
(முஸ்னது அஹ்மது, அபூயஅலா-ஸஹீஹ்)

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: "ஒருவர் மக்கள் பார்வையில் தொழுவதைவிட வீட்டில் தொழுவதின் சிறப்பிற்கு உவமையாவது, நஃபில் தொழுகையைவிட பர்ளுத் தொழுகையின் சிறப்பை போன்றதாகும்."
(முஃஜமுத் தப்ரானி - ஹஸன்)

இரவிலும் பகலிலும் பேணவேண்டிய நஃபில் மற்றும் ஸுன்னத்து தொழுகைகளை வீட்டில் நிறைவேற்றுவதற்கு ஆர்வம் காட்ட வேண்டும். இதனால் மகத்தான நன்மை கிடைப்பதுடன், முழுமையான முறையில் ஸுன்னத்தை நிறைவேற்றிய நன்மையும் கிடைக்கும்.

**நஃபில் தொழுகைகளை வீட்டில் தொழுவதால் ஏற்படும் நன்மைகள்.**

(அ) தொழுகையில் முழுமையானப் பணிவு, மனத்தூய்மை ஏற்படுகிறது. முகஸ்துதியை விட்டு தன்னைப் பாதுகாத்துக் கொள்ள இது உதவியாக இருக்கும்.

(ஆ) வீட்டில் தொழுவதால் அங்கு அல்லாஹ்வின் அருள் இறங்குகிறது; ஷைத்தான் அதிலிருந்து வெளியேறி விடுகிறான்.

(இ) ஃபர்ழான தொழுகைகளைப் பள்ளியில் தொழுவதால் நன்மை கூடுதலாக கிடைப்பது

போல் நஃபில் தொழுகைகளை வீட்டில் தொழு வதால் நன்மைகள் கூடுதலாக கிடைக்கின்றன.

----------

# சபையிலிருந்து எழும்போது கடைப்பிடிக்க வேண்டிய ஸுன்னத்துகள்

‘கஃஃப்ஃஃபாரதுல் மஜ்லிஸ்’ என்று ஹதீஸில் கூறப்பட்ட துஆவைச் சபை முடிந்தவுடன் ஓத வேண்டும். அந்த துஆ:

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ اَشْهَدُ اَنْ لَّااِلٰهَ اِلَّا أَنْتَ اَسْتَغْفِرُكَ وَاَتُوْبُ اِلَيْكَ

பொருள்: “அல்லாஹ்வே! உன்னைப் புகழ்வதுடன் உன்னைத் தூய்மைப்படுத்துகிறேன்; உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை; உன்னிடமே மன்னிப்பு கேட்கிறேன்; மேலும் உன்னிடமே மீளுகிறேன்.” (ஸுனன் அபூதாவூத்)

இன்று நாம் பல சமயங்களில் பல இடங்களில் கூடுகிறோம்; சந்திக்கிறோம். அப்போது

அமர்ந்தோ, நின்றோ நாம் சிறிது நேரம் பேசுகிறோம். இவ்வாறான அனைத்துப் பேச்சுகளின் இறுதியில் நாம் இந்த துஆவை ஓதும்போது எத்தனை முறை அல்லாஹ்வைப் புகழ்கிறோம்! அவனைத் தூய்மைப்படுத்தகிறோம்! இதனால் நமது உள்ளங்களில் அல்லாஹ்வின் அன்பு அதிகமாவதுடன் ஈமான் (நம்பிக்கை) உறுதி அடைகிறது. இந்தப் பிரார்த்தனையில் அல்லாஹ்வைப் புகழ்வதுடன் பாவமன்னிப்புக் கோருதலும் உள்ளது. நமது ஈமானை (நம்பிக்கையை)ப் புதுப்பித்துக் கொள்ள ஏகத்துவ வார்த்தைகளும் உள்ளன.

இந்த துஆவைக் கூறுவதால் அந்தச் சபையில் நிகழ்ந்த குற்றங்கள், தவறுகள் மன்னிக்கப்படுகின்றன.

அ) நாம் மூன்றுமுறை சாப்பிடுகிறோம். அப்போது உடன் இருப்போருடன் பல பேச்சுக்களைப் பேசவும் செய்கிறோம்.

(ஆ) நமது நண்பரை, அண்டை வீட்டாரை, உறவினரைப் பார்க்கும்போது நின்றோ உட்கார்ந்தோ அவரிடம் சிறிது நேரம் பேசுகின்றோம்.

(இ) பணியிடத்தில் அமர்ந்திருக்கும்போது அல்லது பாடசாலையில் படித்துக் கொண்டிருக்கும் போது பலருடன் பேசுகிறோம்.

(ஈ) வீட்டில் அமர்ந்து மனைவி மற்றும், பிள்ளைகளுடன் பேசுகிறோம்.

(உ) வாகனத்தில் செல்லும்போது அருகில் அமர்ந்து இருப்போரிடம் பேசுகிறோம்.

(ஊ) பாடசாலைக்குப் படிக்கவோ அல்லது படித்துக் கொடுக்கவோ செல்லும் போதும் பலருடன் பேசுகிறோம். ஆக இப்படி நமது சிறிய பெரிய சபைகளை எண்ணிக்கொண்டே போகலாம்.

இப்படிப் பல சமயங்களில் நாம் இந்தத் திக்ரைக்

கூறுவதால் அல்லாஹ்வுடன் நமது தொடர்பு எப்போதும் உறுதியாக இருக்கிறது. பலமுறை அல்லாஹ்வைப் புகழ்ந்து தூய்மைப்படுத்துவதற்கு வாய்ப்பு கிடைக்கிறது. பலமுறை பாவமன்னிப்புக் கேட்க முடிகிறது. ஏகத்துவ வாசகத்தை அதிகம் அதிகம் கூறி அல்லாஹ்தான் வணங்கத் தகுதியானவன் என்ற கொள்கையை ஆழமாக பதிய வைத்துக் கொள்ளும் பல சந்தர்ப்பத்தையும் பெறுகிறோம்.

இமாம் இப்னுல் கய்யிம் (ரஹ்) கூறுகிறார்கள்: நண்பர்களுடன் சந்திப்பது இரு வகைப்படும்.

(1) நேரம் கழிப்பதற்கும் பேசி மகிழ்வதற்கும் மட்டும் சந்திப்பது. இந்தச் சந்திப்பில் நன்மையை விட தீமையே மிகைத்துக் காணப்படும். குறைந்த பட்சம் இதில் நேரத்தை வீணடிப்பதும், உள்ளம் கெட்டுவிடுவதும் கண்டிப்பாக இருக்க வாய்ப்புகள் உண்டு.

(2) நன்மை மற்றும் உண்மையை எடுத்துச்

சொல்வதற்கும் வெற்றியின் வழியில் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்வதற்கும் சந்திப்பது மற்றும் ஒன்றிணைவது. இந்த மாதிரி சந்திப்புகள் மிகப் பயனுள்ளதாகவும் நன்மை பயக்கக் கூடியதாகவும் அமையும்.

## தூய எண்ணம் கொள்வது

நமக்கு அல்லாஹ் ஆகுமாக்கிய எத்தனையோ காரியங்கள் உள்ளன. (உ.ம்:) தூங்குதல், சாப்பிடுதல், வியாபாரம், தொழில், இன்னும் பல. இவை அனைத்தையும் தூய எண்ணங்களைக் கொண்டு நாம் நன்மைகளாக மாற்ற முடியும். இதன் மூலம் ஒவ்வொரு நாளும் பல ஆயிரம் நன்மைகளை நாம் அடைந்து கொள்ளலாம். இப்படி நன்மைகளை அடைவதற்கு ஒவ்வொரு செயலைச் செய்வதற்கு முன் அல்லாஹ்விற்காகச் செய்கிறோம் என்ற எண்ணத்தை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும்.

நபி ﷺ கூறினார்கள்: "செயல்கள்

எல்லாம் எண்ணங்களைக் கொண்டே (கணிக்கப்படுகின்றன). ஒவ்வொரு மனிதனுக்கும் அவன் எதை எண்ணுகிறானோ அதுதான்."

(ஸஹீஹுல் புகாரி)

இரவில் துரிதமாகப் படுக்க வேண்டும். அப்போது இரவுத் தொழுகைக்கு எழ வேண்டும்; ஃபஜ்ர் தொழுகைக்கு எழ வேண்டும் என்று எண்ணிக் கொண்டால், தூங்குவதும் வணக்கமாக ஆகிவிடும். இவ்வாறே அனைத்து ஆகுமான செயல்களையும் தூய, நல்ல எண்ணங்களைக் கொண்டு வணக்கமாக மாற்றலாம்.

## ஒரே நேரத்தில் பல வணக்கங்கள்

நேரங்களை நல்ல வழிகளில் பேணக்கூடியவர் கள்தாம் இதை உணர்ந்து கொள்ள முடியும்.

**இதை வாழ்க்கையில் நடைமுறைப்படுத்து வதற்குரிய செயல்முறை விளக்கமாவது;**

(1) நாம் நடந்தோ அல்லது வாகனத்திலோ

பள்ளிக்குத் தொழுகைக்காக செல்கிறோம். இவ்வாறு செல்வதே ஒரு நன்மைக்குரிய வணக்கமாகும். இதற்கும் நமக்கு நன்மை உண்டு. அத்துடன் இந்த வேளையில் அல்லாஹ்வைத் திக்ரு செய்து கொண்டே சென்றால், குர்ஆன் ஓதிக் கொண்டே சென்றால் நாம் கூடுதல் நன்மையையும் அடைந்து கொள்கிறோம்.

(2) மார்க்கச் சட்டத்திற்கு உட்பட்டு நடக்கும் ஒருவரின் வலீமா விருந்திற்குச் சென்றால், அதுவும் ஒரு வணக்கம்தான். அதே சமயம் அங்கு இருக்கும் நேரத்தில் பிறருக்குச் சில நன்மைகளை எடுத்துக் கூறினால்... அல்லாஹ்வைப் பற்றியும் மறுமையைப் பற்றியும் சிலவற்றை வந்திருப்பவர்களுடன் பேசிக் கொண்டால்... மேலும் நன்மைக்கு மேல் (நன்மையை அடைந்து கொள்கிறோம். அல்லது குறைந்த பட்சம் வீண் பேச்சுகளைத் தவிர்த்துக் கொண்டு அல்லாஹ்வுடைய திக்ரில் இருக்கலாம்.

(3) பெண்கள் அல்லாஹ்விற்காக என்று

வீட்டு வேலையில் ஈடுபட்டு இருக்கும் போது அதுவும் ஒரு நன்மையாகவே ஆகிவிடுகிறது. அத்துடன் திக்ரும் செய்து கொண்டால் அல்லது ஒலி நாடாக்களில் குர்ஆன் மற்றும் நல்ல இஸ்லாமியச் சொற்பொழிவு போன்றவற்றைக் கேட்டுக் கொண்டே வேலையில் ஈடுபட்டால் கூடுதல் நன்மையையும் அவர்கள் அடைந்து கொள்வார்கள்.

இப்னு உமர் (ரழி) அறிவிக்கிறார்கள்: "நாங்கள் நபி ﷺ அவர்களின் சபையில் அமர்ந்திருக்கும் போது நபியவர்கள் "என் இறைவா... என்னை மன்னித்துவிடு! என் பிழை பொறுத்தலை ஏற்றுக் கொள்! நிச்சயமாக நீதான் பிழை பொறுப்பவன்; நிகரற்ற அன்புடையவன்" என்று நூறுமுறைக் கூறுவதை நாங்கள் எண்ணி இருக்கிறோம். (ஸுனன் அபூதாவூது)

நபி ﷺ அவர்கள் ஒரே நேரத்தை எப்படி இரண்டு வணக்கங்களுக்காக பயன்படுத்தினார்கள் என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

முதலாவது அல்லாஹ்வை நினைவு கூர்வது; அவனிடம் பாவமன்னிப்பு கேட்பது. இரண்டாவது, தோழர்களுடன் அமர்வது; அவர்களுக்கு மார்க்கத்தைக் கற்றுக் கொடுப்பது.

---------

# எல்லா நேரத்திலும் அல்லாஹ்வை நினைவு கூர்வது

நாம் அல்லாஹ்வை வணங்குவதற்கும் மற்றும் அவனுக்கே நாம் அடிமை என்பதை வெளிப்படுத்துவதற்கும் படைக்கப்பட்டோம். அல்லாஹ்வை அதிகமதிகம் திக்ர் செய்வதன் (நினைவு கூர்வது) மூலம் தான் அந்த நோக்கத்தை நாம் அடைய முடியும். மேலும், திக்ருதான் நாம் அல்லாஹ்வுடன் தொடர்புடையவர்களாக இருக்கிறோம் என்பதற்கும் அடையாளமாகும்.

ஆயிஷா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்: "நபி ﷺ அவர்கள் தனது எல்லா நேரத்திலும் அல்லாஹ்வை நினைவு கூர்பவர்களாக இருந்தார்கள்." (ஸஹீஹ் முஸ்லிம்)

(1) எப்போதும் அல்லாஹ்வுடன் தொடர்புடைய வர்களாக இருப்பதுதான் வாழ்க்கையின் இலட்சியமாகும்! அவன் பக்கம் ஒதுங்குவதுதான்

ஈடேற்றமும் வெற்றியும் ஆகும்! அவனிடம் நெருங்குவதுதான் நற்பாக்கியமும் மகிழ்ச்சியுமாகும். அவனை விட்டு தூரமாகுவதோ! வழிகேடும் நஷ்டமுமாகும்.

(2) அல்லாஹ்வை அதிகம் திக்ர் செய்வது முஸ்லிம்களின் தன்மையாகும். அதுவே அவர்களை நயவஞ்சகர்களை விட்டு வேறுபடுத்துகிறது. நயவஞ்சகர்கள் அல்லாஹ்வை மிகச் சொற்பமாகவே நினைவு கூர்வார்கள்.

(3) அடியான் அல்லாஹ்வை மறக்கும் போதுதான் ஷைத்தான் அவன்மீது ஆதிக்கம் கொள்கிறான். எனவே, அல்லாஹ்வின் நினைவு ஷைத்தானின் சூழ்ச்சிகளை விட்டு நம்மை பாதுகாக்கும் உறுதி மிக்க அரணாகும்.

அடியான் அல்லாஹ்வை மறக்க வேண்டும் என்று ஷைத்தான் எப்போதும் விரும்புகிறான்.

(4) அல்லாஹ்வை நினைவு கூர்வது ஈடேற்றம் மற்றும் நற்பாக்கியத்தின் பாதையாகும்.

الَّذِينَ آمَنُوا وَتَطْمَئِنُّ قُلُوبُهُمْ بِذِكْرِ اللّٰهِ أَلَا بِذِكْرِ اللّٰهِ تَطْمَئِنُّ الْقُلُوبُ

மெய்யாகவே நம்பிக்கை கொண்டிருப்பவர்கள் அவர்கள் தாம்; (அவர்கள் முன்) அல்லாஹ்வின் திருப்பெயர் துதி செய்யப்பட்டால் அவர்களுடைய உள்ளங்கள் நிம்மதி அடைந்து விடுகின்றன. (ஏனென்றால்) அல்லாஹ்வின் பெயரை துதி செய்வதனால் (உண்மை நம்பிக்கையாளர்களின்) உள்ளங்கள் நிச்சயமாக நிம்மதி அடையும் என்பதை (நபியே! நீங்கள்) அறிந்து கொள்ளுங்கள். (அர்ரஅது 13:28)

(5) அல்லாஹ்வின் நினைவில் எப்போதும் ஈடுபட்டிருக்க வேண்டும். ஏனெனில், சொர்க்கவாசிகள் எதைப் பற்றியும் துக்கப்பட மாட்டார்கள். ஆனால், இவ்வுலகில் அல்லாஹ்வை நினைவு கூராமல் இருந்த நேரங்களை எண்ணி துக்கப்படுவார்கள்.

அல்லாஹ்வை அதிகம் நினைவு கூர்வதும் எப்போதும் அவனது நினைவில் இருப்பதும் நமக்கு அவனுடன் உள்ள தொடர்பை உறுதிப்படுத்துகிறது.

இமாம் நவவி (ரஹ்) கூறுகிறார்கள்: உளூ இல்லாத நிலையிலும், குளிப்பு கடமையான நிலையிலும், மாதவிடாய் அல்லது பிரசவத் தொடக்கு உள்ள நிலையிலும் உள்ளத்தாலும் நாவாலும் திக்ருடைய அனைத்து வகைகளையும் செய்வது கூடும் என்பது மார்க்க அறிஞர்களின் ஏகோபித்த முடிவாகும். எனினும், குர்ஆன் ஓதுவதில் மட்டும் மார்க்க அறிஞர்களிடம் கருத்து வேறுபாடு உள்ளது.[3]

(6) யார் அல்லாஹ்வை நினைக்கிறாரோ அவரை அல்லாஹ்வும் நினைக்கிறான்.

---------------------------

3. இதில் ஏற்றமான கருத்து என்னவெனில் குர்ஆனும் ஓதலாம் என்பதுதான். எல்லா நிலையிலும் குர்ஆனை மனமாகவும் கையில் எடுத்துப் பார்த்தோ ஓதலாம். (மொழிபெயர்ப்பு ஆசிரியர்)

فَاذْكُرُونِي أَذْكُرْكُمْ وَاشْكُرُوا لِي وَلَا تَكْفُرُونِ

நீங்கள் என்னை நினைத்துக் கொண்டேயிருங்கள். நானும் உங்களை நினைத்து (அருள் புரிந்து) வருவேன். நீங்கள் எனக்கு நன்றி செலுத்தி வாருங்கள்; எனக்கு மாறு செய்யாதீர்கள்.

(அல்பகரா 2:152)

உலகத்திலுள்ள அரசர் நம்மைப் பற்றி புகழ்ந்து பேசினார் என்று நமக்குத் தெரியவந்தால் எவ்வளவு மகிழ்ச்சி அடைவோம். அரசர்களுக்கெல்லாம் பேரரசனான அல்லாஹ் இவ்வுலகத்திலுள்ள சபையினரைவிட மிகச்சிறந்த சபையினரான வானவர்களிடம் புகழ்ந்து பேசுகிறான் என்றால், இது எவ்வளவு மகிழ்ச்சிக்குரிய செய்தி என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்.

(7) திக்ர் என்பது வெறும் வாயால் முணுமுணுப்பது மட்டுமல்ல. அதாவது, உள்ளம் அச்சமற்று மறந்த நிலையில் இருக்க, வாயால் மட்டும் வார்த்தைகளைத் திரும்பத் திரும்ப சொல்வது

மட்டும் திக்ர் அல்ல என்பதை விளங்க வேண்டும். மாறாக, நாவால் திக்ர் செய்யும்போது அதன் அர்த்தங்களை உள்ளத்தால் சிந்தித்தவர்களாகவும் அதைக்கொண்டு படிப்பினை பெற்றவர்களாகவும் இருக்க வேண்டும்.

அல்லாஹு தஆலா கூறுகிறான்.

وَاذْكُرْ رَبَّكَ فِي نَفْسِكَ تَضَرُّعًا وَخِيفَةً وَدُونَ الْجَهْرِ مِنَ الْقَوْلِ بِالْغُدُوِّ وَالْآصَالِ وَلَا تَكُنْ مِنَ الْغَافِلِينَ

(நபியே!) உங்கள் மனதிற்குள் மிகப் பணிவோடும், உரத்த சப்தமின்றி பயத்தோடும் மெதுவாகவும் காலையிலும், மாலையிலும் உங்கள் இறைவனை நினைவு செய்து கொண்டிருங்கள்! அவனை மறந்தவர்களில் நீங்கள் ஆகி விடாதீர்கள்!

(அல் அஃராஃப் 7:205)

ஆகவே திக்ரில் ஈடுபடுபவர், தாம் எதைச் சொல்கிறோம் என்பதை உள்ளத்தால் சிந்திக்க

வேண்டும். இதன் மூலம் நாவின் திக்ரும் உள்ளத்தின் திக்ரும் ஒன்று சேர்ந்து அகத்தாலும் புறத்தாலும் அல்லாஹ்வுடன் தொடர்புடையவர் களாக ஆக முடியும்.

---------

# அல்லாஹ்வின் அருட்கொடையைப் பற்றி சிந்திப்பது

நபி ﷺ அவர்கள் கூறுகிறார்கள்: "அல்லாஹ்வின் அருட்கொடைகளைப் பற்றி ஆராயுங்கள்; சிந்தியுங்கள், அல்லாஹ்வைப், பற்றி சிந்திக்காதீர்கள்." (முஃஜமுத் தப்ரானி)

ஒவ்வொரு நாளும் நாம் பலமுறை அல்லாஹ்வின் அருளை எண்ணிப் பார்ப்பதற்குரிய சந்தர்ப்பங்கள் ஏராளம் உள்ளன. எத்தனையோ காட்சிகளைப் பார்க்கிறோம். எத்தனையோ செய்திகளைக் கேட்கிறோம். அப்போது அல்லாஹ் நமக்கு வழங்கியிருக்கும் அருளை, கிருபையை நினைத்து நாம் அவனுக்கு நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

(1) உ.ம்: சில சந்தர்ப்பங்களைப் பாருங்கள் நீங்கள் தொழுகைக்குச் செல்கிறீர்கள் உங்களுக்கு அருகில் உள்ள எத்தனையோ

நபர்கள் வசதியிருந்தும் பள்ளிக்குச் செல்லாமல் இருப்பதைப் பார்க்கிறீர்கள்! குறிப்பாக, ஸுப்ஹ் தொழுகைக்குச் செல்லும்போது எத்தனையோ முஸ்லிமான ஆண்கள், பெண்கள் இறந்தவர் களைப் போன்று எவ்வித உணர்வுமின்றி தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்க்கின்றீர்கள். அப்போது அல்லாஹ் உங்கள் மீது செய்த அருளை நினைத்துப் பாருங்கள்.

(2) நீங்கள் ஒரு பாதையில் நடந்து அல்லது வாகனத்தில் சென்று கொண்டிருக்கும் போது அங்கு பல காட்சிகளைப் பார்க்கிறீர்கள்! சிலருக்கு விபத்து நடந்து சோதனையில் சிக்கியுள்ளார்கள். சிலர் பாவத்தைச் சம்பாதித்துக் கொண்டே, உதாரணமாக இசை கேட்டுக்கொண்டே வாகனத்தில் செல்கிறார்கள். இதையெல்லாம் விட்டு அல்லாஹ் உங்களைப் பாதுகாத்து இருக்கிறான். இது அவன் உங்கள் மீது செய்த அருள் அல்லவா?

3) உலக நாடுகளில் நடக்கும் பல செய்திகளை

அன்றாடம் கேட்கிறோம். சில இடங்களில் மக்கள் பசியால் சாகின்றனர். சில இடங்களில் தீயில் கருகி சாகின்றனர். சில இடங்களில் வெள்ளத்தால், மழையால் சாகின்றனர். சில இடங்களில் மக்கள் தங்களுக்குள் சண்டையிட்டு மடிகின்றனர். பலர் அகதிகளாக்கப்படுகின்றனர். பூகம்பங்களில் பலர் உயிர் இழக்கின்றனர். இப்படி இன்னும் பல நிகழ்ச்சிகளை நீங்கள் கேள்விப்படத்தான் செய்கிறீர்கள். உண்மையில், நேர்வழி பெற்ற நல்லடியார் ஒவ்வொரு நொடியிலும் அல்லாஹ்வின் அருளை எண்ணிப் பார்த்துக் கொண்டே இருப்பார். அதனால் அல்லாஹ் தமக்குச் செய்த அருட்கொடைகளை எண்ணி மனம் நெகிழ்ந்து நன்றி செலுத்திக் கொண்டும் அவனைப் புகழ்ந்து கொண்டும் இருப்பார். நமக்கு அல்லாஹ் வழங்கியிருக்கும் இந்தத் தூய மார்க்கமான இஸ்லாம், உடல் ஆரோக்கியம், வசதி, தீயவற்றிலிருந்து பாதுகாப்பு – இவையெல்லாம் அல்லாஹ்வின் அருளாகும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “சிரமத்தில் இருக்கும் ஒருவரைப் பார்த்த பிறகு,

اَلْحَمْدُ لِلّٰهِ الَّذِي عَافَانِي مِمَّا ابْتَلَاكَ بِهِ، وَفَضَّلَنِي عَلَى كَثِيرٍ مِمَّنْ خَلَقَ تَفْضِيلا

பொருள்: “அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும்! அவனே உன்னை எதனைக் கொண்டு சோதித்தானோ அதிலிருந்து என்னைப் பாதுகாத்தான். மேலும் அவன் படைத்த படைப்பினங்களில் பெரும்பாலானவற்றை விட என்னை மேன்மை யாக்கி வைத்தான்” என்று கூறினால் அந்த சோதனை அவருக்கு வராது.” (ஜாமிஉத் திர்மிதி)

அல்லாஹ் கூறுகிறான்:

فَاذْكُرُوا آلَاءَ اللّٰهِ لَعَلَّكُمْ تُفْلِحُونَ

“அல்லாஹ்வின் அருட்கொடைகளையெல்லாம்

நீங்கள் நினைத்துப் பாருங்கள். (அதனால்) நீங்கள் வெற்றி பெறலாம்.” (அல் அஃராப் 7:69)

---------

# மாதம் ஒருமுறை குர்ஆன் ஓதி முடித்தல்

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: ஒவ்வொரு மாதத்திலும் குர்ஆனை (முழுமையாக) ஓதுங்கள். (ஸுனன் அபூதாவூத்)

இதற்கு இலகுவான வழிமுறையாவது: "கடமையான தொழுகைகளுக்குப் பத்து நிமிடங்களுக்கு முன் பள்ளிக்குச் சென்றுவிட்டால் ஸுன்னத் தொழுகைக்குப் பின் சில பக்கங்கள் நீங்கள் ஓதலாம். இவ்வாறு செய்தால் குறைந்தது ஒருநாளைக்குப் பத்து பக்கங்கள் ஓதலாம். இப்படியே ஓதி வந்தால் ஒரு மாதத்தில் ஒருமுறை குர்ஆனை ஓதி முடித்து விடலாம்.

---------

# தூக்கத்திற்கு முன் கடைப்பிடிக்க வேண்டிய ஸுன்னத்துகள்

(1) بِسْمِكَ اللّٰهُمَّ اَمُوْتُ وَاَحْيَا

அல்லாஹ்வே! உனது பெயரைக் கொண்டே மரணிக்கின்றேன்! மேலும் வாழ்கிறேன்!
(ஸஹீஹுல் புகாரி)

(2) இரண்டு உள்ளங்கைகளை ஒன்று சேர்த்து அதில் ஊதி, பிறகு

بِسْمِ اللَّهِ الرَّحْمَٰنِ الرَّحِيمِ

قُلْ هُوَ اللّٰهُ أَحَدٌ (1) اللّٰهُ الصَّمَدُ (2)
لَمْ يَلِدْ وَلَمْ يُولَدْ (3) وَلَمْ يَكُنْ لَهُ كُفُوًا أَحَدٌ (4)

(அல் இக்லாஸ் 112:1-4)

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ الْفَلَقِ (1) مِنْ شَرِّ مَا خَلَقَ (2) وَمِنْ شَرِّ غَاسِقٍ إِذَا وَقَبَ (3) وَمِنْ شَرِّ النَّفَّاثَاتِ فِي الْعُقَدِ (4) وَمِنْ شَرِّ حَاسِدٍ إِذَا حَسَدَ (5)

(அல் ஃபலக் 113:1-5)

بِسْمِ ٱللَّهِ ٱلرَّحْمَٰنِ ٱلرَّحِيمِ

قُلْ أَعُوذُ بِرَبِّ النَّاسِ (1) مَلِكِ النَّاسِ (2) إِلَهِ النَّاسِ (3) مِنْ شَرِّ الْوَسْوَاسِ الْخَنَّاسِ (4) الَّذِي يُوَسْوِسُ فِي صُدُورِ النَّاسِ (5) مِنَ الْجِنَّةِ وَالنَّاسِ (6)

(அன்னாஸ் 114:1-6)

ஆகிய ஸூராக்களை ஓதி பிறகு தனது உடலில் எங்கெல்லாம் முடியுமோ அங்கெல்லாம் தடவிக்

கொள்ள வேண்டும். முதலில் தலை பிறகு முகம் பிறகு உடலின் முற்பகுதி இவ்வாறு மூன்றுமுறை செய்து கொள்ள வேண்டும்.

(ஸஹீஹுல் புகாரி)

ஆயத்துல் குர்ஸீ ஓத வேண்டும்.

(ஸஹீஹுல் புகாரி)

**اَللّٰهُ لَا إِلٰهَ إِلَّا هُوَ الْحَيُّ الْقَيُّومُ لَا تَأْخُذُهُ سِنَةٌ وَلَا نَوْمٌ لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ مَنْ ذَا الَّذِي يَشْفَعُ عِنْدَهُ إِلَّا بِإِذْنِهِ يَعْلَمُ مَا بَيْنَ أَيْدِيهِمْ وَمَا خَلْفَهُمْ وَلَا يُحِيطُونَ بِشَيْءٍ مِنْ عِلْمِهِ إِلَّا بِمَا شَاءَ وَسِعَ كُرْسِيُّهُ السَّمَاوَاتِ وَالْأَرْضَ وَلَا يَئُودُهُ حِفْظُهُمَا وَهُوَ الْعَلِيُّ الْعَظِيمُ.**

(அல்பகரா 2:255)

இதை ஓதுவதால் அல்லாஹ்விடமிருந்து ஒரு

பாதுகாவலர் நியமிக்கப்படுகிறார். ஷைத்தான் அவரை நெருங்க மாட்டான்.

**(4). بِاسْمِكَ رَبِّي وَضَعْتُ جَنْبِي، وَبِكَ أَرْفَعُهُ، إِنْ أَمْسَكْتَ نَفْسِي فَارْحَمْهَا، وَإِنْ أَرْسَلْتَهَا فَاحْفَظْهَا بِمَا تَحْفَظُ بِهِ عِبَادَكَ الصَّالِحِينَ**

பொருள்: “என் இறைவா! உனது பெயரைக் கொண்டே எனது விலாவை வைத்தேன். உன்னைக் கொண்டே அதை உயர்த்துவேன்; நீ எனது உயிரைத் தடுத்துக் கொண்டால் அதற்கு இரக்கம் காட்டு, அதை நீ விட்டுவிட்டால் உனது நல்லடியார்களைப் பாதுகாக்கும் விதத்தில் அதையும் பாதுகாத்துக் கொள்!”

(ஸஹீஹுல் புகாரி)

**(5). اَللّٰهُمَّ إِنَّكَ خَلَقْتَ نَفْسِي، وَأَنْتَ تَوَفَّاهَا، لَكَ مَمَاتُهَا وَمَحْيَاهَا، إِنْ أَحْيَيْتَهَا فَاحْفَظْهَا، وَإِنْ أَمَتَّهَا**

فَاغْفِرْ لَهَا، اَللّٰهُمَّ أَسْأَلُكَ الْعَافِيَةَ

பொருள்: அல்லாஹ்வே! நீயே என் உயிரைப் படைத்தாய்! நீயே அதைக் (தூங்கவைத்து) கைப்பற்றுகிறாய்! அதன் மரணமும் அதன் வாழ்வும் உனக்கே! நீ அதை உயிர்ப்பித்தால் அதைப் பாதுகாத்துக்கொள்! நீ அதை மரணிக்கச் செய்தால் அதை மன்னித்துவிடு! அல்லாஹ்வே! நிச்சயமாக நான் உன்னிடம் (“ஆஃபியா” என்னும்) நற்சுகத்தைக் கேட்கிறேன். (ஸஹீஹ் முஸ்லிம்)

## (6). اَللّٰهُمَّ قِنِي عَذَابَكَ يَوْمَ تَبْعَثُ عِبَادَكَ

(இதை மூன்றுமுறை ஓத வேண்டும்)

பொருள்: அல்லாஹ்வே! உனது அடியார்களை ஒன்று சேர்க்கும் அந்த நாளில் என்னை உனது வேதனையை விட்டு பாதுகாத்துக் கொள்!

## (7). سُبْحَانَ اللّٰهِ

33 முறை ஓத வேண்டும்.

பொருள்: “அல்லாஹ்வை சகலக் குறைகளிலிருந்து தூய்மைப்படுத்துகிறேன்”

اَلْحَمْدُ لِلّٰهِ

33 முறை ஓத வேண்டும்.

பொருள்: “அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே!”

اَللّٰهُ أَكْبَرْ

34 முறை ஓத வேண்டும்.

(ஸஹீஹுல் புகாரி)

**(8). الْحَمْدُ لِلّٰهِ الَّذِي أَطْعَمَنَا وَسَقَانَا، وَكَفَانَا وَآوَانَا، وَكَمْ مِمَّنْ لَا كَافِيَ لَهُ وَلَا مُؤْوِيَ**

பொருள்: எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனே நமக்கு உணவளித்தான்; அவனே நமக்கு நீர் புகட்டினான்; அவனே நமக்குப் போதுமாக்கி வைத்தான்; அவனே நமக்கு

ஒதுங்க இடமளித்தான். எத்தனையோ மக்கள், அவர்களுக்கு போதுமானவரோ ஒதுங்க இடமளிப்பவரோ இல்லை. (ஸஹீஹ் முஸ்லிம்)

**(9). اَللّٰهُمَّ فَاطِرَ السَّمَاواتِ وَالْأَرْضِ، عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ، أَنْتَ رَبُّ كُلِّ شَيْءٍ وَمَلِيكُهُ، أَشْهَدُ أَنْ لَا إِلٰهَ إِلَّا أَنْتَ وَحْدَكَ، لَا شَرِيكَ لَكَ، وَأَنَّ مُحَمَّدًا عَبْدُكَ وَرَسُولُكَ، أَعُوذُبِكَ مِنْ شَرِّ نَفْسِي، وَشَرِّ الشَّيْطَانِ وَشِرْكِهِ، وَأَنْ أَقْتَرِفَ عَلَى نَفْسِي سُوءًا، أَوْ أَجُرَّهُ إِلَى مُسْلِمٍ**

பொருள்: அல்லாஹ்வே! மறைவானவற்றையும் வெளிப்படையானவற்றையும் நன்கு அறிந்தவனே! வானங்களையும் பூமியையும் படைத்தவனே! எல்லாப் பொருட்களின் இறைவனே! அவற்றின் அரசனே! உன்னைத் தவிர வணக்கத்திற்குரியவன்

வேறு யாரும் இல்லை என்று சாட்சி சொல்லுகிறேன். எனது நஃப்ஸின் தீங்கை விட்டும் ஷைத்தானின் கெடுதியை விட்டும் அவனது இணை கற்பிக்கும் செயலை விட்டும் உன்னிடம் பாதுகாவல் தேடுகிறேன்! மேலும், எனக்கு நான் தீங்கிழைப்பதை விட்டும் அல்லது பிறருக்குத் தீங்கு செய்வதை விட்டும் உன்னிடம் பாதுகாவல் கோருகிறேன். (ஸஹீஹ் முஸ்லிம்)

**(10). اَللّٰهُمَّ أَسْلَمْتُ نَفْسِي إِلَيْكَ، وَوَجَّهْتُ وَجْهِي إِلَيْكَ، وَفَوَّضْتُ أَمْرِي إِلَيْكَ، وَأَلْجَأْتُ ظَهْرِي إِلَيْكَ، رَغْبَةً وَرَهْبَةً إِلَيْكَ، لَا مَلْجَأَ وَلَا مَنْجَا مِنْكَ إِلَّا إِلَيْكَ، آمَنْتُ بِكِتَابِكَ الَّذِي أَنْزَلْتَ، وَنَبِيِّكَ الَّذِي أَرْسَلْتَ.**

அல்லாஹ்வே... என்னை நான் உன்னிடம் ஒப்படைத்து விட்டேன்! எனது காரியத்தை உன்னிடம் ஒப்படைத்து விட்டேன்! எனது முகத்தை உன் பக்கம் திருப்பி விட்டேன்! எனது

முதுகை உன்னளவில் சாய்த்து விட்டேன்! உன்னை நேசிக்கிறேன்; உன்னையே பயப்படுகிறேன்; உன்னிடமே தவிர ஒதுங்குமிடமோ, பாதுகாப்புடைய இடமோ வேறு இல்லை; நீ இறக்கிய நூலையும் நீ அனுப்பிய நபியையும் நான் நம்பிக்கை கொண்டேன்.

(ஸஹீஹுல் புகாரி)

**(11). اَللّٰهُمَّ رَبَّ السَّماوَاتِ السَّبْعِ، وَرَبَّ الْعَرْشِ الْعَظِيمِ، رَبَّنَا وَرَبَّ كُلِّ شَيْءٍ، مُنْزِلَ التَّوْرَاةِ وَالْإِنْجِيلِ وَالْقُرْآنِ، فَالِقَ الْحَبِّ وَالنَّوَى، لَا إِلَهَ إِلَّا أَنْتَ، أَعُوذُ بِكَ مِنْ شَرِّ كُلِّ شَيْءٍ أَنْتَ آخِذٌ بِنَاصِيَتِهِ، أَنْتَ الْأَوَّلُ لَيْسَ قَبْلَكَ شَيْءٌ، وَأَنْتَ الْآخِرُ لَيْسَ بَعْدَكَ شَيْءٌ، وَأَنْتَ الظَّاهِرُ لَيْسَ فَوْقَكَ شَيْءٌ، وَأَنْتَ الْبَاطِنُ لَيْسَ دُونَكَ شَيْءٌ، اقْضِ [ص:140] عَنَّا الدَّيْنَ، وَأَغْنِنَا مِنَ الْفَقْرِ**

பொருள்: அல்லாஹ்வே! ஏழு வானங்களின் இறைவனே! மகத்தான அர்ஷின் இறைவனே! எங்கள் இறைவனே! சகலப் பொருட்களின் இறைவனே! வித்துகளையும், விதைகளையும் பிளப்பவனே! தவ்ராத், இன்ஜீல், ஃபுர்கானை இறக்கியவனே! அனைத்துப் பொருட்களின் கெடுதியை விட்டு நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன். நீயே அவை அனைத்தின் நெற்றி முடியைப் பிடித்திருக்கின்றாய்! அல்லாஹ்வே! நீயே முதலாமானவன்! உனக்கு முன் எதுவும் இல்லை; நீயே பிந்தியவன்! உனக்குப் பின் எதுவும் இல்லை; நீயே மறைவானவன்! உனக்கு மறைவானது எதுவும் இல்லை; நீயே வெளிப்படையானவன்! உனக்கு மேல் எதுவும் இல்லை; எங்கள் சார்பாக (எங்கள்) கடனை நிறைவேற்றிவிடு! எங்களை வறுமையை விட்டு (பாதுகாத்துச்) செல்வந்தர்களாக்கிவை!

(ஸஹீஹ் முஸ்லிம்)

(12). آمَنَ الرَّسُولُ بِمَا أُنْزِلَ إِلَيْهِ مِنْ رَبِّهِ وَالْمُؤْمِنُونَ كُلٌّ آمَنَ بِاللّٰهِ وَمَلائِكَتِهِ وَكُتُبِهِ وَرُسُلِهِ، لَا نُفَرِّقُ بَيْنَ أَحَدٍ مِنْ رُسُلِهِ وَقَالُوا: سَمِعْنَا وَأَطَعْنَا غُفْرَانَكَ رَبَّنَا وَإِلَيْكَ الْمَصِيرُ، لَا يُكَلِّفُ اللّٰهُ نَفْسًا إِلَّا وُسْعَهَا لَهَا مَا كَسَبَتْ وَعَلَيْهَا مَا اكْتَسَبَتْ رَبَّنَا لَا تُؤَاخِذْنَا إِنْ نَسِينَا أَوْ أَخْطَأْنَا رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَا إِصْرًا كَمَا حَمَلْتَهُ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِنَا رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهِ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا أَنْتَ مَوْلَانَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِينَ

இந்த இரண்டு வசனங்களை இரவில் யார் ஓதி வருகிறாரோ அவருக்கு அவை போதுமானவையாகும்.

அதாவது, ஒரு சமயம் இரவுத் தொழுகையை

நிறைவேற்றாமல் தூங்கிவிட்டால் இவ்விரண்டுமே போதுமானவையாகும். மற்றொரு கருத்தும் இந்த ஹதீஸுக்குக் கூறப்படுகிறது. அதாவது, அனைத்து விதமான கெடுதிகளை விட்டு இந்த இரண்டு வசனங்களும் அவரைப் பாதுகாத்துக் கொள்ளும். (இமாம் நவவி ﵀ அல் அத்கார்)

(13) தூங்குவதற்கு முன் உளூச் செய்து கொள்ள வேண்டும். (ஸஹீஹுல் புகாரி)

(14) வலது பக்கம் சாய்ந்து படுத்துக் கொள்ள வேண்டும். (ஸஹீஹுல் புகாரி)

(15) வலது கையை வலது கன்னத்திற்குக் கீழே வைத்துக் கொள்ள வேண்டும்.

நபி ﷺ அவர்கள் தூங்கினால் தங்களது வலது கையை வலது கன்னத்திற்குக் கீழ் வைத்துக் கொள்வார்கள். (ஸுனன் அபூதாவூது)

(16) விரிப்பை உதறிக் கொள்ள வேண்டும்.

நபி ﷺ அவர்கள் கூறினார்கள்: “உங்களில்

ஒருவர் படுக்கைக்குச் சென்றால், தனது விரிப்பை உதறிக் கொள்ளட்டும். ஏனெனில், விரிப்பிற்குப் பின்பக்கம் என்ன இருக்கிறது என அவருக்குத் தெரியாது" (ஸஹீஹுல் புகாரி)

(17) ஸூரா அல்காஃபிரூனை ஓதிக் கொள்ள வேண்டும். இதனால் ஷிர்க்கிலிருந்து பாதுகாப்பு கிடைக்கிறது. (ஸூனன் அபூதாவூது)

بِسْمِ اللَّهِ الرَّحْمَنِ الرَّحِيمِ

قُلْ يَاأَيُّهَا الْكَافِرُونَ (1) لَا أَعْبُدُ مَا تَعْبُدُونَ (2) وَلَا أَنْتُمْ عَابِدُونَ مَا أَعْبُدُ (3) وَلَا أَنَا عَابِدٌ مَا عَبَدْتُمْ (4) وَلَا أَنْتُمْ عَابِدُونَ مَا أَعْبُدُ (5) لَكُمْ دِينُكُمْ وَلِيَ دِينِ (6)

இமாம் நவவி (ரஹ்) கூறுகிறார்கள்: "தூங்குவதற்கு முன் இங்கு கூறப்பட்ட அனைத்து திக்ர்

துஆக்களைக் கூறுவதுதான் சிறப்பு. எனினும், முடியவில்லையெனில் மிக முக்கியமான சிலவற்றையாவது ஓதிக் கொள்ள வேண்டும்.”

பெரும்பான்மையான மக்கள் ஒரு நாளைக்கு குறைந்தது இரண்டுமுறையாவது தூங்குகிறார்கள். இங்கு கூறப்பட்ட திக்ர்கள் மற்றும் துஆக்களை இரவில் தூங்கினாலும் அல்லது பகலில் தூங்கினாலும் ஓத வேண்டும். ஹதீஸ்களில் “பொதுவாகத் தூங்கும்போது ஓத வேண்டியது என்றுதான் வந்துள்ளது. எனவே, பகல் அல்லது இரவில், எப்போது தூங்கினாலும் இந்த ஸுன்னத்துகளை முழுமையாக முடிந்த அளவு நிறைவேற்றி பெரும் நன்மைகளை அடைந்து கொள்ள முயல வேண்டும்.

## இந்த ஸுன்னத்துகளைப் பின்பற்றுவதன் நன்மைகள்:

(அ) ஒவ்வொரு திக்ருக்கும் ஒரு தர்மம் என 100 தர்மங்கள் செய்த நன்மை கிடைக்கும்.

(ஒவ்வொரு தஸ்பீஹும் (தஸ்பீஹும்) தர்மமாகும்; ஒவ்வொரு தக்பீரும் (அல்லாஹு அக்பர்) தர்மமாகும்; ஒவ்வொரு தஹ்மீதும் (அல்ஹம்து லில்லாஹ்) தர்மமாகும்; ஒவ்வொரு தஹ்லீலும் தர்மமாகும்.) (ஸஹீஹ் முஸ்லிம்)

அதாவது ஒவ்வொரு திக்ருக்கும் ஒரு தர்மம் செய்த நன்மை கிடைக்கும் என இமாம் நவவி (ரஹ்) விளக்கமளித்துள்ளார்கள்.

(ஆ) இந்த தஸ்பீஹ்களைக் கூறுவதால் சொர்க்கத்தில் 100 மரங்கள் நடப்படும். (இப்னு மாஜா)

(இ) இவற்றை ஓதியவரை அல்லாஹ் பாதுகாத்துக் கொள்கிறான். அவரை விட்டு ஷைத்தான் தூரமாகி விடுகிறான். தீங்குகளிலிருந்து அவர் பாதுகாக்கப்படுகிறார்.

(ஈ) அல்லாஹ்வின் திக்ரால் அவனுக்கு வழிபடுதல், அவனிடம் பொறுப்பு ஒப்படைத்தல், அவனிடம் உதவி தேடுதல், அவனுடைய

ஏகத்துவக் கலிமாவை மொழிதல் ஆகியவற்றைக் கொண்டு தனது அன்றையப் பொழுதை முடிக்கும் நற்பேற்றைப் பெறுகிறார்.

## முடிவுரை:

அன்றாடம் கடைப்பிடிக்க வேண்டிய ஸுன்னத்துகளில் என்னால் முடிந்தவற்றையே இந்தச் சிறுநூலில் ஒன்று சேர்த்துள்ளேன். அல்லாஹ் நம்மை நபி ﷺ அவர்களின் ஸுன்னத்துகளைப் பேணி வாழ வைத்து, அதே நிலையில் மரணிக்க வைப்பானாக!

### நமது இறுதி பிரார்த்தனை

அனைத்துப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ்விற்கே!

ஸலவாத்தும் ஸலாமும் முஹம்மது ﷺ அவர்கள் மீதும் அவர்களது குடும்பத்தார் மற்றும் தோழர்கள் அனைவர் மீதும் உண்டாகட்டும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

உமது வாழ்க்கையை மரணம் வருவதற்கு முன், வாலிபத்தை வயோதிகம் வருவதற்கு முன், ஓய்வை வேலை வருவதற்கு முன், சுகத்தை நோய் வருவதற்கு முன், வசதியை வறுமை வருவதற்கு முன், நன்கு பயன்படுத்திக் கொள்!

(ஸஹீஹுல் ஜாமிஃ)

---------